கட்டாவ் கல-பனையிலே... மோகன வர்ணஜாலப் புதுயுகம்;
ஆயிரம் அகலிகைகளின் மறுமலர்ச்சி. நாடி துடிக்கும் வாழ்வின்
நடனச் சித்திரம். நேசஃபிலே ஆத்ம நிம்மதி.
கறப காலம் வாழும் டெரிகோஸா கற்பனைக் கோல வரிசை.
ஒற்றுமை உணர்வின் உருவகம்.






# கட்டாவ்

டெரிகோஸா சேலைகள்

'டெரின்'

Creative Unit-A 1679



# தீபாவளிக்கு

# ராசி

# கதம்பம்

## (RASI ASSORTMENT)



தேர்ந்து எடுக்க பல கலர்கள்!
அநேக டிசைன்கள்! விரும்புவதை
வாங்கி மகிழ்வோடு பண்டிகை
கொண்டாடுங்கள்.



**ராதா சில்க் எம்போரியம்**
சென்னை-600004

---

சார்பு நிறுவனம்: **ராதா சில்க்ஸ்**
'தன் பில்டிங்ஸ்' மவுண்ட் ரோடு,
சென்னை-600002

---

**ராதா சில்க் எம்போரியம்**
29, கோவிந்த் மஹல்,
86-B, மரைன் டிரைவ், G.ரோடு,
பம்பாய்-400002

---

**ராதா சில்க்கின்
'ராசி' உன்னத
வாழ்வுக்கு ஆசி**

அருள் பிலிம்சாரின் தீபாவளி வெளியீடான
''அவள் ஒரு தொடர்கதை''
திரைப்படத்தில் சுஜாதா

EP-RASI-86

---

**தீபாவளி வரை ஞாயிற்றுக் கிழமைகளிலும் விற்பனை உண்டு**

காயங்களால் தொற்று நோய் பரவக்கூடும்



# புதிய பாண்டு-எய்ட்* பிராண்ட் டிரஸ்ஸிங்

பயன்படுத்தி
அவற்றைப்
பாதுகாருங்கள். காயங்களை
விரைவில் ஆற்ற இப்போது
**மெர்க்கியூரோக்ரோம்**
மருந்து கலக்கப்பட்டுள்ளது.




உங்கள் குழந்தைகளின் வாழ்வில் தூசியும் அழுக்கும் எங்கும் இடம் பெறுகின்றன. ஆனால் அவை இடம் பெறக் கூடாத இடம் ஒன்று உண்டு—அதுதான் திறந்த காயம்.

எல்லா சிறிய வெட்டுக் காயங்கள், கீறல்கள் மற்றும் சிராய்ப்புகளை ஆற்றுவதற்கு புதிய பாண்டு-எய்ட்* டிரஸ்ஸிங் உபயோகியுங்கள். இப்போது அதில் மெர்க்கியூரோக்ரோம் மருந்து கலக்கப் பட்டுள்ளது. இந்த நிரூபணமான ஆன்டிசெப்டிக் மருந்து [illegible] சருமத்துக்கு இதமளித்து, காயங்களை ஆற்ற உதவுகிறது. புதிய பாண்டு-எய்ட்* டிரஸ்ஸிங் பயன்படுத்திப் பாதுகாப்பது விவேகமாகும்.

எப்பொழுதும்
புதிய பாண்டு-எய்ட்**
டிரஸ்ஸிங்குகள்
கைவசமிருக்கட்டும்.

A Johnson & Johnson product

*TRADEMARK © J & J

OBM-3173 TM

# யூகோ பாங்க்கின் உதவிக் கரம்:



## தொழிலதிபர்களுக்கு உதவ, பணவசதி செய்தளிக்கக் காத்திருக்கிறது

நீங்கள் ஒரு சிறுதரத் தொழில் தொடங்க எண்ணம் கொண்டிருந்தாலோ அல்லது முன்பேயுள்ளதை விரிவாக்க விரும்பினாலோ பண வசதிக்கு உடனே யூகோ பாங்கிற்கு வாருங்கள்.

எங்களது புதிய திட்டத்தின் கீழ் கட்டிடம் அமைத்தல், ப்ளான்ட் மற்றும் உபகரணங்கள் வாங்குதல் ஆகியவற்றிற்கு தாராளமான கடனுதவி பெறுவீர்கள்.

சுலபமான நிபந்தனைகள். ஆனால் ப்ளான்ட் உபகரணங்கள் வகையில் உங்கள் தற்சமய முதலீடு ரூ. 7.5 லட்சத்திற்கு மேல் போகக் கூடாது. இந்த ஒன்றுதான் நிபந்தனை.

விவரங்களுக்கு உங்கள் அருகிலுள்ள யூகோ பாங்க் கிளையுடன் தொடர்பு கொள்ளுங்கள்.



## யுனைடெட் கமர்ஷியல் பாங்க்

தாங்களே தங்களுக்கு உதவ மக்களுக்கு லாபகரமாக உதவுகிறது

UCOC-38 TAM




# உங்களுக்காக பிலிப்ஸ் வழங்கும் இந்த அபூர்வமான மியூஸிக் ஸிஸ்டம் பல அரிய சிறப்புகள் கொண்டது...




## மெயின்ஸ்-பாட்டரி ஸிஸ்டம் ஜீஎ.:ப் 533



O&M 3464 TM

## இந்த பிலிப்ஸ் ஜீஎ.:ப் 533 செய்து காட்டுவதை வேறெந்த ரெகார்டு பிளேயரும் செய்யமுடியாது.

இதில் மோனோ இசைத்தட்டு ஒலி பிரமாதமாக இருக்கும்; ஸ்டீரியோ கூடத்தான். இது ஸ்டீரியோ-கார்ட்ரிஜ் மற்றும் அவுட்புட் வசதி கொண்டது. இதை உங்கள் ரேடியோவுடன் இணைத்துப் பாருங்கள். என்ன ஆச்சரியம்! இதோ ஸ்டீரியோ தயார்.





ஸ்டீரியோவாகவும் மாற்றிக்கொள்ளலாம்

இதை நேரடியாக டேப்-ரெகார்டிங் செய்யவும், பதிவு செய்ததைத் திருப்பிக் கேட்கவும் பயன்படுத்தலாம். மோனோ, ஸ்டீரியோ, இரண்டுமே!

மெயின்ஸில் இயக்குங்கள்; அல்லது பாட்டரிகளில். மின்விசை நின்று விட்டால், இது தானாகவே பாட்டரிகளில் இயங்குகிறது.



இது எப்பொழுதும் ஒரு நிலையான வேகத்தில் இயங்குகிறது என்பதை நம்பலாம். இதை உறுதிப்படுத்துகிறது விசேஷ 'எலெக்ட்ரானிக் ஸ்பீட் 'கவர்னர்'

இசைத்தட்டின் ஒலி முடிந்ததும், இது தானாகவே நின்றுவிடுகிறது. இது மட்டுமா? இதில் வால்யூம் மற்றும் தொனிக் கட்டுப்பாடுகளும், வெவ்வேறு 3-ஸ்பீட்களும் உள்ளன.

இதை வீட்டிலும், வெளியிலும் இயக்கலாம். (இன்பமாகப் பொழுது போக்க, வசதியாக வெளியில் எடுத்துச் செல்லலாம் என்பதை எண்ணிப் பாருங்கள்!)

இதன் அழகிய தோற்றமே உங்களைக் கவர்ந்துவிடுமே! மரம், ஸ்டைன்லெஸ் ஸ்டீல் மற்றும் அலங்கார அலுமினியத்தில் அழகான அமைப்பு கொண்டது.

**இத்தனை சிறப்புகளும் கொண்ட பிலிப்ஸ் மெயின்ஸ்-பாட்டரி ஸிஸ்டம் ஜீஎ.:ப் 533-ஐ, இவ்வளவு குறைந்த விலையில், பிலிப்ஸ் தொழில் நுட்பத் திறன் மட்டுமே உங்களுக்கு வழங்க முடியும்.**

இன்றே உங்கள் பிலிப்ஸ் வியாபாரியைக் காண்க.

# பிலிப்ஸ்

மிகமென்மையான பிளேடு-களையும், விண்வெளி பிளேடு-களையும் உபயோகித்துப் பார்த்தேன்.



கத்திமுனைபோல கூரான பிளேடுகளையும் விதவித-மான விசேஷ உலோகங்-களடங்கிய பிளேடுகளையும் உபயோகித்துப் பார்த்தேன்.



வெட்டுக்காயங்களும், கீறல்களும், எரிச்சலும்தான் மிச்சம்.



கடைசியாக சில்வர் ப்ரின்ஸ் உபயோகித்துப் பார்த்தேன். முகக்ஷவரம் மழமழப்பாகவும், சுத்தமாகவும் இருந்தது... நிறைவேற்றமுடியாத உறுதிமொழிகளல்ல.



# சில்வர் ப்ரின்ஸ்

## சுத்தமான, மழமழப்பான க்ஷவரத்தைத் தரும்... உறுதிமொழியை நிறைவேற்றிடும் பிளேடு.

SILVER PRINCE
STAINLESS

## சில்வர் ப்ரின்ஸ்–சுகமான க்ஷவரம்...சோகுசான க்ஷவரம்

நீங்கள் சில்வர் ப்ரின்ஸ் கொண்டு மழமழப்பாகவும், சுத்தமாகவும் க்ஷவரம் செய்து கொள்ளலாம். ஏனெனில் இறக்குமதியான மிகச் சிறந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீலில், இந்தியாவில் அதி முன்னேற்ற-




மான தொழில்நுட்பத்துடன் தயாரிக்கப் படுகிறது சில்வர் ப்ரின்ஸ். நீங்களும் சுகமான க்ஷவரத்தைப் பெறுகிறீர்கள். எனவேதான் சில்வர் ப்ரின்ஸ் முகக்ஷவரத்தை சுகக்ஷவரம் என்கிறோம்.

Grant.5.TM

சாரதா'ஸ் இந்த தீபாவளிக்கு பிரமிப்பூட்டும் வேலைப்பாடுகள் அமைந்த பட்டுப்புடவைகளை பரவசமூட்டும் டிசைன்களுடன் நியாய விலையில் அளிக்கிறது.

மனோரஞ்ஜனி

ரஜனி பாலா

பவிஷ்ய ராணி

தன் பில்டிங்ஸ்.
மவுண்ட் ரோடு.
சென்னை-600002.
போன் : 87177

# சாரதா'ஸ்

N. S. B. ரோடு.
திருச்சி-620002.
போன் : 7077

# ஒருமைப்பாடு பலவிதம்...
























சுயாட்சி பற்றி ஒருமைப்பாட்டின் கற்பனை!

# ...ஒவ்வொன்றும் ஒரு விதம்!




ஆண்டிக்கும் அரசுக்கும்
வேற்றுமை இருந்தாலும்
உணவுக்கு ஏந்தும்
கப்பரை தான் ஒருமைப்பாடு!

ஆரம்பப் பள்ளி வகுப்பு என்றாலும்...




ஆய்வுக்கான வகுப்பு என்றாலும்...




'அட்மிஷன் இல்லை' என்பது ஒருமைப்பாடு!




அரிசி, ஆட்டா, எண்ணெய், தண்ணீர்,
உளுந்து, உப்பு என்று அத்தியாவசியப்
பண்டங்கள் ஆயிரம்! அவற்றுள்
வித்தியாசம் ஏதுமின்றி ஒருமைப்
பாட்டைப் பெறுவது...
'ஸ்டாக் இல்லை' என்ற போர்டு!

பணத்தில் கறுப்புண்டு! அது 'கரன்ஸி'
என்ற காகிதம்!
பணத்தில் சிவப்புண்டு!
இதைக் கலைஞர் சொன்னதுண்டு!
அதுவும் 'கரன்ஸி' என்ற காகிதம்!
பணத்தில் வெளுப்புண்டு! அதுவும்
கரன்ஸி என்ற காகிதம்!
பணம் பல ஆனாலும் இதெல்லாம்
வெறும் காகிதம் என்பது
ஒருமைப்பாடு!







ஒருமைப்பாடு பற்றி
சுயாட்சியின் கற்பனை!





# கல்கி

## ஒருமைப்பாடு சிறப்பிதழ்


ஆனந்த, ஐப்பசி 3 — அக்டோபர் 20, 1974


ஹிந்தியிலும் தமிழிலும் இலக்கியப் பரிவர்த்தனைக்கு நமது உதவி ஆசிரியர் திரு ரா. **வீழிநாதன்** சாதித்துள்ளவை ஏராளம். அந்த அளவில் பாரத ஒருமைப் பாட்டுக்காகப் பணியாற்றியுள்ள அவர் இந்த இதழை உருவாக்கும் பொறுப்பை ஏற்றது மிகப் பொருத்தம்.

திரு எம். பக்தவத்சலம் அவர்களும் திரு கே. ஏ. அப்பாஸ் அவர்களும் இந்த இதழுக்காகவே விசேஷக் கட்டுரைகள் வழங்கிக் கௌரவித்துள்ளார்கள். திரு கண்ணதாசன் ஒரு மணி நேரத்தில் அற்புதமான கவிதை எழுதித் தந்தார்.

கமல்ஜோஷி, டாட்டாபுரம் சுகுமாரன் ஆகியோர் எழுதிய கதைகளின் தமிழாக்கங்கள் ஒருமைப்பாட்டுக்குப் பணியாற்றுகின்றன. ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் கட்டுரையும் பல மாநிலங்களில் வழங்கும் நாடோடிக் கதைகளும் சிறப்பிதழ் என்ற வர்ணனைக்கு வலு ஊட்டுகின்றன.

நகைச்சுவைக்கு உமாபதி உதவியுள்ளார். துணுக்குகளுக்குக் குறைவில்லை. வாசகர் பங்கும் உண்டு.

பாரத ஒருமைப்பாட்டின் உருவகமாக விளங்கும் ஒரு நபரை இன்று தேர்ந்தெடுக்க வேண்டுமானால் நமது பிரதமரை விடப் பொருத்தமான ஒருவரை யாராலும் சுட்டிக்காட்ட முடியாது. அவரது வண்ணப் படத்தை மேலட்டைக்கு வழங்கியுள்ளவர்: **அவினாஷ் பஸ்ரீச்சா.**

பிரதமரின் தலைமையில் நல்லாட்சி நிலவட்டும்; ஒருமைப்பாடு ஓங்கட்டும். உழைப்பை நல்கி, உண்மைகளை உணர்த்தி ஒத்துழைப்போம். —**ஆசிரியர்**


ஒரே இடத்திலிருந்தபடி தள்ளிட்டிருக்காதீங்க..
ஒருவருக்கொருவர் இடம் மாற்றித்
தள்ளிப்பாருங்க!!


சங்க காலத்துக்குப்
போவோம்!


வேண்டாம்!
7 ரூபாய்க்குப் படி அரிசி
விற்கும் இந்தக் காலத்-
-துக்கே வாங்க!

# மாநில சுயநல ஆட்சி!

கல்கி

மலர் 34

இதழ் 12



திராவிட நாடு என்றும் பின்னர் தனித் தமிழ்நாடு என்றும் பிரிவினை விஷத்தைக் கக்கிக் கொண்டிருந்தது திராவிட முன்னேற்றக் கழகம். ஆனால் ஒரு கட்டத்தில் அறிஞர் அண்ணாதுரை தமக்கே உரிய தீர்க்கதரிசனத்துடன் அதனைக் கட்டுப்படுத்திப் பல்லைப் பிடுங்கியும் வைத்தார். ''பிரிவினைக் கோரிக்கையை நாங்கள் விட்டு விட்டோம்'' என்று அழுத்தந் திருத்தமாகச் சொன்னார்.

அவர் மறைவுக்குப் பிறகு அதே அளவு உயர்ந்த மனப் பக்குவத்தைப் பெறாத அவரது சீடர்கள் பிரிவினை வாதத்தையே வேறு விதமாகக் கிளப்பியிருக்கிறார்கள். மாநில சுயாட்சி என்ற புதுப் பெயரில் கோஷமிடுகிறார்கள். இது பசுத் தோல் போர்த்திய புலியே யன்றி வேறில்லை.

மத்திய — மாநில உறவுகளை ஆராய்வதற்கென்று ராஜமன்னார் அவர்களை நியமித்தது தி.மு.க. அரசு. அவரும் நிலைமைகளை அலசிப் பல பயனுள்ள யோசனைகளைத் தெரிவித்தார். இந்தச் சிபாரிசுகள் ஆராய்வதற்கும் ஆலோசனைக்கும் உரியன. பல ஏற்கத் தக்கன. அகில இந்திய ரீதியில் ஒரு மகாநாடு நடத்திப் பல மாநிலப் பிரதிநிதிகளையும் தருவித்து ராஜமன்னார் கமிட்டிச் சிபாரிசுகளை ஆராய்ந்திருந்தால் அது உண்மையாகவே மத்திய — மாநில அரசுகளின் நல்லுறவுக்கு உதவுபடியாக இருந்திருக்கும். ஆனால் எந்தத் தி.மு.க. அரசு ராஜமன்னாரை நிலைமையை ஆராயுமாறு நியமித்ததோ அந்தத் தி.மு.க. அரசே ராஜமன்னார் சிபாரிசுகளை ஏற்கவில்லை. மாநில சுயாட்சி பற்றிய தனது கருத்துக்களை ஒரு மசோதாவாக்கி அதனைச் சட்டசபையில் தனக்குள்ள பெருவாரியான பலத்தினால் நிறைவேற்றியும் வைத்தது.

ராஜமன்னாரின் சிபாரிசுகள் இவர்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை. அவர் கூறியுள்ள யோசனைகளுக்கும் அதிகமான அதிகாரங்கள் தேவை என்று பேராசைப்படுகிறது தி.மு.க. அரசு.

வருமான வரிகள், எக்ஸைஸ் வரிகள், கம்பெனி வரிகள், சொத்து வரிகள், மரண வரிகள் போன்ற எல்லாமே மாநில அரசுக்குச் சேரவேண்டும் என்கிறது தி.மு.க. அரசு. மத்திய அரசுக்குப் பாக்கி இருப்பது ஏற்றுமதி இறக்குமதிக்கான சுங்க வரிகள் மட்டுமே. இது மத்திய அரசுக்குப் போதவில்லையானால் மாநில அரசுகளிடம் கையேந்தி நிற்கட்டும் என்பது முதல்வரின் கருத்து போலும்!

இதோடு இவர்களது சுயநலம் முடியவில்லை. பாங்குகள், இன்ஷியூரன்ஸ், பங்கு மார்க்கெட், இவை போன்று எதிர்காலத்தில் உருவாகக் கூடிய பொருளாதார அமைப்புக்கள் எல்லாம் அகில இந்திய ரீதியில்தான் இயங்க முடியும் என்பது எளியவருக்கும் தெரியும். ஆனால் தி. மு. க. மந்திரி சபை இவையெல்லாமே மாநில அரசின் அதிகாரத்துக்கு உட்பட்டிருக்க வேண்டும் என்கிறது.

இவர்களது மாநில சுயநல ஆட்சிக்கு இதுவும் போதவில்லை! குற்றச் சட்டங்கள், கிரிமினல், ஸிவில் வழக்குகளைத் தொடுக்கும் வழிமுறைகள் எல்லாம் மாநில அரசின் ஏகபோக உரிமைகளாகிவிட வேண்டும் என்கின்றனர். அதாவது ஒவ்வொரு மாநிலத்துக்கும் தனித் தனியே குற்றச் சட்டங்கள், வழக்குத் தொடுக்கும் விதிமுறைகள் ஆகியன இருக்கும்.

இதுபோன்ற கோரிக்கைகள் நிறைவேறுமேயானால் இந்தியாவின் ஐக்கிய பாவம், 'ஐயோ பாவ'மாகிவிடும் என்பதில் ஐயமில்லை.

தி. மு. க. கோரும் உரிமைகளை மாநில மக்களே மறுப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்




## எரிமலை அடங்கிவிட்டது !

'எரிமலை அடங்கிவிட்டது' என்ற பிரதமரின் வர்ணனையைவிடச் சிறப்பாக யாரும் திரு கிருஷ்ண மேனன் மறைவைக் குறித்துச் சொல்ல முடியாது.

வாழ் நாள் முழுவதுமே ஒரு வேகமும் சுறுசுறுப்பும் காட்டிய அவர் மிகுந்த வாதப் பிரதிவாதங்களுக்கு உள்ளான மனிதராகவும் விளங்கினார். அபாரமான அறிவாற்றலுடன், மமதை என்றே எண்ணக் கூடிய அளவில் பிடிவாத குணமும் உடையவரா யிருந்தார். தியாக சுடும் அவருடைய நாக்கு. பத்திரிகை நிருபர்களுக்கு அவரைப் பேட்டி காண்பதென்றால் ஒரே உற்சாகம். நிச்சயம் பரபரப்பை ஏற்படுத்தும் ஒரு விஷயமாவது கிடைத்து விடும் !



எத்தனையோ சாதனைகளைப் புரிந்தவர் வேதனைகளையும் அளிக்கத் தவறவில்லை. ஜீப் ஊழல் மட்டற்ற அபகீர்த்தியைப் பெற்றளித்தது என்றால் சீனப் படையெடுப்பு அவருடைய மந்திரி பதவி பறிபோகவே காரணமாயிருந்தது:

என்றாலும் கிருஷ்ண மேனனின் தியாக வாழ்வும், சுதந்திரப் போராட்ட காலத்தில் அவர் காங்கிரஸ் பிரதிநிதியாகப் பல உலக மகாநாடுகளில் கலந்து கொண்டு பணியாற்றியதும், ஐ. நா. சபையிலும் பிரிட்டனிலும், அயர்லாந்திலும் பாரதப் பிரதிநிதியாக விளங்கியதும் நம் நன்றிக்கு உரிய அரும் பெரும் காரியங்கள்.

டீயும் பிஸ்கட்டும் அவர் உடல் பசிக்குப் போதுமாயிருந்தன. அவரது அறிவுப் பசிக்கு அந்த எளிமை ஒத்து வரவில்லை. அந்தப் பசியைத் தணித்துக் கொள்ள அவர் மேற்கொண்ட முயற்சிகள் அவர் மேதையாக விளங்கவும் பட்டங்கள் பதவிகள் பெறவும் உதவின.

இந்தியராகப் பிறந்தும் பிரிட்டிஷ் பிரஜையாகப் பல காலம் வாழ்ந்து அந்நாட்டின் பொது வாழ்விலும் அரசியலிலும் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றார். அவரது சாதனைகளிலெல்லாம் மிக முக்கியமானதாகக் கருதப்படுவது மலிவு விலையில் உயர்ந்த நூல்கள் வெளிவர வழிகாட்டியதுதான். பிரிட்டனில் அவர் ஆரம்பித்து வைத்த இந்த நற்காரியம் இன்று உலகெங்கும் பரவி அவர் நினைவைப் போற்றிக் கொண்டிருக்கிறது.



## மு. வ. மறைந்தார்

தமிழ் வளர்ச்சிக்கு அயராது உழைத்த அறிஞர்களின் வரிசையில் டாக்டர் மு. வரதராசனார் அவர்களுக்குச் சிறப்பிடம் உண்டு. நண்பர்களிடம் நயமாகப் பழகும் நற்குணம் வாய்ந்தவர் அவர். தம்மை வெளியில் காட்டிக் கொள்ளாத தன்னடக்கமும், நேரம் வரும்போது வீறு கொண்டெழும் ஆற்றலும் படைத்த டாக்டர் மு. வ. தமிழ் மாணவர்களிடையே பெரும் செல்வாக்குப் படைத்தவர்; அவரது ஆராய்ச்சித் திறனும், நாவன்மையும் அவருக்குத் தமிழ்கூறும் நல்

---

ராஜாஜி சிந்தனை

### நல்ல இலக்கியம்

எவை நல்ல புத்தகங்கள்? எவை பயனற்றவை? ஒரு நல்ல புத்தகத்தைப் படித்து முடித்ததும் உங்கள் ஆன்ம பலம் அதிகரித்திருப்பதைக் காண்பீர்கள். உங்களுக்கு நீங்களே, 'நான் தைரியமாக இருப்பேன், மனத்தில் உள்ளதை ஒளிக்காமல் பேசுவேன், நல்லவனாய் இருப்பேன். இப்போதுள்ளதைவிடச் சிறந்தவனாக விளங்குவேன்' என்று சொல்லிக் கொள்வீர்கள். மற்றொரு விதமான புத்தகம் உங்களைத் திருப்திப்படுத்தும், சுவாரசியமாய் இருக்கும், சாதுரியமாய் எழுதப்பட்டிருக்கும். ஆனால் அதைப் படித்து முடித்த பிறகு நீங்கள் இப்போதுள்ளதைவிடச் சிறந்த மனிதனாகவோ, பெண்மணியாகவோ விளங்க மாட்டீர்கள். அந்நூல் உங்கள் வாழ்வின் ஒரு பகுதியை — திரும்பப் பெற முடியாத பகுதியை — எடுத்துக் கொண்டு விட்டது. ஆனால் அது பதிலுக்கு உங்களுக்கு எதையும் வழங்கவில்லை!

கலையும் இலக்கியமும் உபதேசம் செய்பவையாக அமைய வேண்டியதில்லை. நேரடியாக உபதேசிப்பது என்பது கலையே அல்ல. உயர்தரமான கலை அல்லது இலக்கியம் படிப்பவனின் ஆன்மாவின் மீதாக ஓர் ஆரோக்கியக் காற்று வீசுமாறு செய்ய வேண்டும். அது சொர்க்கத்தின் காற்று போல விளங்கி மனத்திலுள்ள அழுக்குகளை நீக்கித் தூய்மையாக்க வேண்டும்.

சுயராஜ்யா, ஆகஸ்டு 30, 1958

## மந்திரி சபை மாற்றங்கள்

ஸ்ரீமதி இந்திராகாந்தி மந்திரி சபையில் பெரிய மாற்றங்களை அறிவித்திருக்கிறார். மிக முக்கியமான பொறுப்புக்கள் திரு சி. சுப்பிரமணியம் அவர்களிடமும் திரு டி. ஏ. பை அவர்களிடமும் ஒதுக்கப்பட்டுள்ளன. நிதி அமைச்சராகிறார் சி. எஸ். தொழில் துறைக்கும் விநியோகத்துக்கும் பொறுப்பேற்கிறார் டி. ஏ. பை. ஜகஜீவன்ராம் விவசாய மந்திரியாகிறார்.



சி. சுப்பிரமணியம்



டி. ஏ. பை



ஜகஜீவன்ராம்

புதிய அமைச்சரவை புதிய சிந்தனைகளுக்கு இடமளித்து ஊக்கத்துடன் செயல்படும் என எதிர்பார்ப்போம்.

---

உலகமெங்கும் பெரும் புகழை ஈட்டித் தந்தனர். அவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியரா யிருந்தார்; சென்னைப் பல்கலைக் கழகத்தின் செனேட் குழுவின் அங்கத்தினராக நீண்ட காலம் இருந்திருக்கிறார். மதுரைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராய் இருந்து அந்தப் பொறுப்பான பதவியின் மதிப்பை உயர்த்தினார். சாகித்திய அகாதெமியிலும், தமிழ் நூல்கள் பதிப்புத் துறையிலும் அங்கம் வகித்தார். இலக்கிய நயம் கொண்ட பல நூல்கள் எழுதியிருக்கிறார். ''அகல்விளக்கு'' என்னும் அவரது நாவல் 1963ம் ஆண்டுக்கான சாகித்திய அகாதெமியின் பரிசைப் பெற்றது.

மு. வ. அவர்களின் மறைவுக்கு யாருக்கு ஆறுதல் கூறுவது? அவரது குடும்பத்துக்கா? மாணவர் சமுதாயத்துக்கா? அல்லது தவப் புதல்வன் ஒருவனை இழந்து நிற்கும் தமிழன்னைக்கா? திகைக்கிறோம்!

## பருப்பு வேகுமா?

ஆயிரக் கணக்கான மூட்டைகள் பருப்பு வகைகளைத் தமிழக அரசு கேட்பாரற்றுக் கிடப்பதாகக் கருதிக் கைப்பற்றியிருக்கிறது. வட இந்திய நகரங்களிலிருந்து தமிழக வியாபாரிகளால் தருவிக்கப்பட்டவை இவை. இவற்றை எடுத்துப் போகாமல் சென்னை ராயபுரம் ஸ்டேஷனிலேயே வியாபாரிகள் விட்டு வைத்திருந்ததன் காரணம், விலை ஏறும் என்ற ஆசைதான் என்பதாகச் சந்தேகம் எழ இடமுண்டு. ஆனால் இது முழு உண்மையும் ஆகாது. வியாபாரிகளுக்கும் தொழிலதிபர்களுக்கும் இன்று பாங்குகளில் கிடைக்கக் கூடிய கடன் வசதி மத்திய அரசின் சமீபத்திய உத்தரவுகளால் வெகுவாகக் குறைந்து போய் விட்டது. அதனால் புரட்டுவதற்குப் பணம் இல்லாத நிலையில் உள்ளூர் வியாபாரிகள் பணத்தைக் கட்டி விட்டு வாகனிலுள்ள பொருளை எடுத்துக் கொள்ளத் தாமதமாவது இயல்பு.

எவ்வாறாயினும் கைப்பற்றப்பட்டுள்ள பருப்பு மூட்டைகள் சர்க்கார் சொத்தல்ல என்பதைத் தி. மு. க. அரசு உணர்ந்து செயல்படுவதாகத் தெரிகிறது. இம் மூட்டைகளை விநியோகம் செய்வதன் மூலம் கிடைக்கும் பணத்தைத் தனிக் கணக்கில் வைத்துக் கொள்ள ஏற்பாடாகி உள்ளது. பொருள்களைப் பறிமுதல் செய்து விற்கும்போது கிடைக்கும் பணத்தை அதிகாரிகள், சந்தடியில் சமாராதனை என்ற முறையில் அரசாங்கத்துக்கு வருமானமாகக் கொள்ளவில்லை என அறிந்து மகிழ்கிறோம்.

## மானத்தை விற்று மலர்

நல்ல காரியங்களுக்குப் பணம் திரட்ட மலர் போடுவதும் அதில் விளம்பரங்கள் பிரசுரிப்பதும் சகஜம்தான். ஆனால் திராவிட முன்னேற்றக் கழகம் மானத்தை விற்று மலர் போடுகிறேன் என்கிறது!

கம்பெனிகள் அரசியல் கட்சிகளுக்கு நன்கொடை அளிப்பதில் பல தில்லுமுல்லுகள் விளைகின்றன என்பதால் இதைத் தடை செய்ய வேண்டும் என அறிஞர்கள் பலர் நீண்டகாலமாகக் கூறி வந்தனர். ஒருவழியாகப் பாராளுமன்றம் அதைச் சட்டமாக்கியது. உடனேயே அந்தச் சட்டத்தை மீற என்னென்ன வழிகள் உள்ளன என அரசியல் கட்சிகள் யோசித்தன. மலர் வெளியிடுகிறோம் அதற்கு விளம்பரம் பெறுகிறோம் என்றன. ஒரு பக்கத்துக்கு ஆயிரம் இரண்டாயிரம் என்று பணம் பெற்றன. இந்திரா காங்கிரஸும் இதற்கு விதிவிலக்கல்ல. வற்புறுத்தலின்றி நடந்தால், ஓர் அளவோடு நின்றால் போகட்டும் எனலாம். ஆனால் தி. மு. க. இதிலும் ஒரு சாதனையை நிகழ்த்தப் பார்க்கிறது. வெள்ளி விழாவை யொட்டி வெளியாகும் மலரில் ஒரு பக்க விளம்பரத்துக்கு இருபத்தையாயிரம் , ரூபாய் பெறுவதென முடிவு செய்திருக்கிறது. இத்தனை பணம் தர முடியாத சாமானிய நிறுவனங்களுக்கு 'ஐயோ பாவம்' என்று மற்றொரு மலர் வெளியிடுமாம். அதில் ஒரு பக்க விளம்பரத்துக்கு இரண்டாயிரம் ரூபாய்தானாம்!

இவ்வகையில் மொத்தத்தில் எழுபத்தைந்து லட்சம் ரூபாய் சேகரிக்க முடியும் எனத் தி. மு. க. மேலிடம் நம்புகிறதாம். மிரட்டியோ, வற்புறுத்தியோ இப்படி வாங்கப்

படும் விளம்பரப் பணம் தேர்தலுக்குப் பயனாகும் என்பதில் சந்தேகமில்லை.

சட்டத்தை ஏய்ப்பதும் ஒரு சாதனையா? அடித்துப் பிடுங்குவதற்கும் ஓர் அளவில்லையா?



**ஸ்ரீ காமாட்சி அம்பாளுக்கு லட்சார்ச்சனை**

**ஸ்ரீ காமாக்ஷி அம்பாளுக்கு 15-10-74-ல் தொடங்கி 23-10-74 முடிய நவராத்திரி நடக்க விருக்கிறது. வழக்கம்போல் லட்சார்ச்சனை நடைபெறும். அர்ச்சனை செய்ய விரும்பும் பக்தர்கள் தங்கள் நாம-நட்சத்திரத்துடன் ரூபாய் 10-00 ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் தேவஸ்தானம், காஞ்சிபுரம் என்ற முகவரிக்கு அனுப்பி வைத்து அம்பிகையின் அநுக்கிரகத்துக்குப் பாத்திரர்களாகலாம்.**

## மின்விசைக் கட்டண உயர்வு

தமிழ்நாடு மின்சார வாரியத்தின் 1974–75க்கான வரவு செலவுக் கணக்கில் ரூ. 49 கோடி துண்டு விழுகிறது என்பதால் இதை ஓரளவு சரிக்கட்ட மின்விசைக் கட்டணங்களை எல்லாக் கட்டத்திலும், எல்லா மட்டத்திலும் தமிழக அரசு உயர்த்தியுள்ளது. சாமானிய மக்களிலிருந்து பெரிய தொழிலதிபர்கள்வரை இக்கட்டண உயர்வால் பாதிக்கப்படுகின்றனர். வீடுகளில் குறைந்தபட்சக் கட்டணம் உயருகிறது. ஏன், மீட்டருக்கு மாத வாடகைகூட இரட்டிப்பாகிறது. அனல் நிலைய மின்சாரம், நீர்நிலைய மின்விசை என்ற பாகுபாடும் போகிறது. இக்கட்டண உயர்வினால் மின்வாரியத்துக்கு ரூ. 15 கோடி கிடைக்குமாம்.

பற்றாக்குறை முழுவதையும் ஈடு செய்ய முடியவில்லையே, ஓரளவுக்குத்தானே ஈடுகட்ட முடிகிறது என்று அரசு அங்கலாய்க்கலாம். ஆனால் மக்களுக்கு இது ஆறுதல் அளிக்காது. பற்றாக்குறை ஏன் ஏற்பட்டது? அனாவசியச் செலவுகள் குறைக்கப்பட்டனவா? மின்விசை விநியோகத்தில் நஷ்டம் ஏன் குறைக்கப்படவில்லை? அதற்காக என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன? நிர்வாகத் திறமை உச்சகட்டத்தில் அமைந்துள்ளதா? இதுபோன்ற கேள்விகள் எழுவது சகஜமே.

# புரியலையே தம்பி!

"சங்கதி தெரியுமா அண்ணே!"

"என்ன தம்பி?"

"இனிமே அரசாங்க அலுவலகத்துக்குள்ளே எம். பி., எம். எல். ஏ. யாராச்சும் வந்தாங்கன்னு, அரசு ஊழியருங்க எழுந்து நின்னு அவங்களை வரவேற்க வேணுமாம்!"

"மக்கள் பிரதிநிதிகளாச்சே!"

"அது சரி, அண்ணே! ஆனா, குனிஞ்ச தலை நிமிராமே வேலை செய்யிற ஊழியருக்கு எதிரிலே வந்து நிற்கிற மக்கள் பிரதிநிதியைத் தெரியல்லேன்னு என்ன செய்யறதாம்?"

"அதுக்காகத்தானே அவங்க தரையிலே புரள்கிற மாதிரி நீளமாத் துண்டு அணிஞ்சுக்கிறாங்க?"

"ஆளும் கட்சி எம். எல். ஏ., எம். பி.க்களைத் துண்டைப் பார்த்து அடையாளம் கண்டுக்கலாம். மற்றவங்களை எப்படியண்ணே ஊழியருங்க தெரிஞ்சுக்க முடியும்?"

"புரியல்லே, தம்பி!"

"அரசு அலுவலகங்கள் பக்கமே அரசியல்வாதிங்க தலை காட்டக்கூடாதுன்னு ராஜாஜி சொல்லிக்கிட்டு இருந்தாரு. இப்போ அரசு அலுவலகங்களிலே எந்த எம். எல். ஏ. எப்போ நுழைவாரோன்னு ஊழியருங்க வாசல்படியையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டியதாயிருக்கு! கையைக் கட்டிக்கிட்டு நின்னு உருப்படியா அவங்க வேலை பார்க்கறது எப்படி?"

"புரியலே தம்பி!"

"நிலத்தின் விலையைப் பன்னிரண்டு வருஷங்களிலே தவணை முறையிலே செலுத்தி, சாகுபடி செய்கிற குத்தகைக்காரர் நிலத்தை ஆர்ஜிதம் செய்து கொள்ளலாம்னு சட்டம் வரப் போகுதாமே அண்ணே?"

"அதுமட்டுமில்லே தம்பி! ஒரு வருஷம் தவணைப் பணத்தைச் செலுத்திவிட்டு அப்புறம் சில வருஷங்கள் கொடுக்காமலே இருந்தாக்கூட, நிலச் சொந்தக்காரர் எதுவும் நடவடிக்கை எடுக்க முடியாது!"

"அப்போ இருபது வருடங்கள், முப்பது வருடங்கள் நீடிக்குமே? இடையில் நில உரிமையாளர் இறந்து போயிடவும் கூடும், இல்லையாண்ணே?"

"மெய்தான், தம்பி!"

"நில உடைமைக் காரரைவிட, சாகுபடி செய்கிற குத்தகைக்காரருக்குக் கூடுதலான நிலம் இருந்தா எப்படி அண்ணே?"

"புரியலே, ஆண்டவனே!"

"கலைஞர் ஆட்சியிலே போய் ஆண்டவனை அழைக்கிறீங்களே, அண்ணே? எனக்கு ஒரு யோசனை தோணுதுங்க..."

"சொல்லு, தம்பி!"

"சாகுபடி நிலங்களுக்கு இப்படி ஒரு சட்டம் போடற மாதிரி வீடுகளை வாடகைக்கு விட்டிருக்காங்களே — அந்த வாடகை வீடுகளுக்கும் இப்படி ஒரு சட்டம் கொண்டு வரலாமில்லையா?"

"அபத்தங்களுக்குப் பஞ்சமில்லாத கலைஞர் ஆட்சியிலே அப்படி நடந்தாலும் ஆச்சரியப்படறதுக்கில்லே, தம்பி!"

— ரூபா

THE MOST WONDERFUL IDEAS GROW WITH COTTON

# FINISHES



wash-n-wear... stain resistant...
non-shrink... finishes-to heighten
the utility of the natural fibre...

**Century**– FOR 100% COTTON TEXTILES

THE CENTURY SPG. & MFG. CO. LTD., Bombay 400025



Adroit-CM-540-P

# இப்போது பம்பாயிலிருந்து யூ.கே. மற்றும் ஐரோப்பாவுக்கு எஸ்ஐஏ 747B ஸர்விஸ்

இப்போது, சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் உமக்கென்றே துவக்கி வைக்கும் ஸர்விஸ்: பம்பாயிலிருந்து ரோம், ஃப்ராங்க்ஃபர்ட் மற்றும் லண்டன் சென்றிட போயிங் 747B அல்லது 707 ஸூப்பர் ஜெட். வியாழன் தோறும் செல்கிறது எமது 747B, திங்கள் தோறும் 707 ஸூப்பர் ஜெட். சிங்கப்பூருக்கு செவ்வாய் மற்றும் சனி தோறும் 707 ஸூப்பர் ஜெட். ஆஸ்திரேலியாவுக்கான எஸ்ஐஏ தொடர்புகள் அதே தினம் கிடைக்கும். ஹாங்காங், தெய்பெய், ஒஸாகா, மற்றும் டோக்கியோ நகரங்களுக்கான தொடர்புகள் மறுநாள் கிடைக்கும். விமானப் பயண முழுதும் உங்களை மகிழ்விக்கும் விசேஷமான பணிவிடை இதர ஏர்லைன்களையும் அதிசயிக்க வைப்பது. இன்றே பாருங்கள் பிரயாண ஏஜெண்டை, அல்லது எஸ்ஐஏ.

சிங்கப்பூர் ஏர்லைன்ஸ்



வான வீதியிலே உமக்கோர் சிங்காதனம்

எஸ் ஐ ஏ, நரிமன் பாயின்ட், பம்பாய்-400 021. போன்: 250951. டெலெக்ஸ்: 011—3887.
எஸ் ஐ ஏ, 86D, மவுண்ட் ரோடு, சென்னை-600 002. போன்: 811760; 83917, 83819. டெலெக்ஸ்: MS 7278.

174 SR TM



# ஒருமைப் படுத்தும் அன்னபூரணி

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சிகாமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

**பா**பம் செய்ததற்குத் தண்டனையாகத் தரித்திரத்தில் கஷ்டப்படுகிறவர்களுக்கும் ஸ்ரீ காமாக்ஷியேயான அன்னபூரணி கருணை பாலிக்கிறாள். பசி என்பது பாபிக்கும் வரக் கூடாது. கேரளத்தில் செருக்குன்னம் என்று அன்னபூர்ணா க்ஷேத்திரம் இருக்கிறது. அங்கே சேவார்த்திகளுக்கெல்லாம் சாப்பாடு போடுகிறார்கள். அதுமட்டுமில்லை; கோயிலுக்குப் பக்கத்தில் ஒரு மரத்தில் ஒரு சோற்று மூட்டையை இரவு கட்டி வைக்கிறார்கள். இராக்காலத்தில் அந்தப் பக்கமாகப் பசியோடு போகிற திருடர்களும் கூடப் பசியாற வேண்டும் என்று இந்த ஏற்பாடு.

இத்தனை கருணையோடு ஓர் அம்மா இருக்கிறபோது இன்றைக்கு லோகத்தில் இவ்வளவு துர்ப்பிட்சம் இருக்கிறது என்றால், அதிலிருந்து நாம் எத்தனை பாபம் செய்திருக்கிறோம் என்பதைத்தான் தெரிந்துகொள்ள வேண்டும். 'சரக ஸம்ஹிதை'யில் ஆத்ரேயர் சொல்வதாக வருகிறது: 'ஒரு தேசத்திலோ நகரத்திலோ, கிராமத்திலோ ஆட்சியில் இருக்கப்பட்டவர்கள் தர்மத்தில் தவறி நடந்தால் அவர்களைச் சேர்ந்த ஜனங்களும் இதே போக்கை அநுசரிக்க வேண்டியதாகிறது. இப்படி அதர்மம் ரொம்பவும் பரவுகிற போது தேவர்கள் இவர்களைக் கைவிட எண்ணுகிறார்கள். (தேவர்கள் என்றால் இயற்கைச் சக்திகளை நடத்துகிற ஈசுவரனின் அதிகாரிகள்). உடனே ருதுக்கள் மாறுகின்றன. மழை சரியாகப் பெய்வதில்லை. பெய்தாலும் காலம் தவறி, இடம் தவறி, அளவு தவறிப் பெய்யும். பருவக் காற்று முறைப்படி வீசுவதில்லை. வியாதிக் கிருமிகள் அதிகமாகின்றன. பயிர் பச்சைகளின் செழிப்புப் போகிறது. உணவுப் பதார்த்தங்களில் துர்ப்பிட்சம், கிடைக்கிற கொஞ்சத்திலும் தோஷங்கள், கெட்ட காற்று, வியாதி இவற்றால் தேசம் பாழாகிறது.'

உலகத்தின் கஷ்டத்திலிருந்து நம்முடைய தப்பையே புரிந்துகொண்டு திருந்தப் பிரயாசை எடுத்தோமாயின், அன்னபூரணியே அன்ன பிக்ஷை, ஞானப் பிக்ஷை எல்லாம் போடுவாள். அவள் சரீரமே ஞான மயமானது. 'அ'விலிருந்து 'க்ஷ' வரையிலான எல்லா அட்சரங்களுமே உருவான மந்திர மாத்ருகா ரூபிணி அவள் என்கிறார் ஆசாரியாள் (ஆதி க்ஷாந்த ஸமஸ்த வர்ணனைகரீ.) இப்படிப்பட்ட சரீரம் படைத்தவளாதலால், நம் சரீரத்தை மட்டுமின்றி அறிவையும் வளர்க்கப் பிக்ஷை போட்டு ஞானம் தருவாள்.

அது எப்படிப்பட்ட ஞானம் என்பதைத்தான் ஆசாரியாள், அன்னபூர்ணா ஸ்துதியின் கடைசியில் சொல்கிறார். அந்த நிலையில் பரமேசுவரனே தகப்பனாராகவும், அம்பாளே தாயாராகவும் தெரிவார்கள். உடனே சகல ஜீவராசிகளும் சகோதரர்களாகி விடுவார்கள்; மூவுலகமும் சொந்த வீடாகிவிடும். இது இப்போது நிறையப் பேசப்படுகிற தேச ஐக்கியப் பாட்டைவிட எத்தனையோ படி மேலே! மூன்றுலக ஐக்கியப்பாடு! பக்தி இருந்தால், பராசக்தி ஒருத்தி இருக்கிறாள் என்ற பயம், பக்தி இருந்து விட்டால், எல்லோரும் அவள் குழந்தைகள்தான் என்கிற சகோதர பாவம் தானாகவே வந்துவிடும். இதற்குப் பிரசங்கம் வேண்டாம், திட்டம் வேண்டாம், பிரசாரம் வேண்டாம். அநாதி காலமாக இப்படித்தான் பிரத்தியட்சத்தில் ஐக்கியம் இருந்திருக்கிறது. ஸ்வாமிக்காகத் தெற்கத்திக்காரன் காசிக்குப் போனான்; ஸ்வாமிக்காக வடக்கத்திக்காரன் ராமேசுவரத்துக்கு வந்தான். ஐக்கியப்பாடு என்கிற பேச்சு இல்லாமலே, 'சகோதர சகோதரிகளே' என்ற பிரசங்கம் இல்லாமலே மத உணர்ச்சியால் ஐக்கியமாக, ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகளாக இருந்து வந்தோம். இதோடுகூட அறிவாளிகளின் மட்டத்திலோ சகல சாஸ்திரங்களுக்கும் பொது பாஷையாக இருந்த சம்ஸ்கிருதம் தேசத்தின் நாலு கோடிகளையும் ஒன்றாகச் சேர்த்து வைத்திருந்தது. இப்போது 'ஸெக்யூலர்' நாகரிகத்தில் மதத்தை விட்டாயிற்று. சம்ஸ்கிருதத்தையும் ஒரு மாதிரி தீர்த்துக்கட்டிவிட சகல யத்தனங்களும் நடக்கின்றன – நான் இங்கேயுள்ள நம்மவர்களை மட்டும் சொல்லவில்லை. ஹிந்திக்காரர்களும் இந்தக் கைங்கரியத்தை நன்றாகவே காரிய ரீதியில் செய்து வருகிறார்கள். இடைக்காலத்தில் ஒரு பொது இணைப்பாக (link) வந்த இங்கிலீஷையும் விரட்டிவிடப் பார்க்கிறார்கள்.

பாஷை விஷயம்கூட இரண்டாம்பட்சம் தான். பக்தியை வளர்த்துவிட்டால் போதும். அப்புறம் என் மாகாணம், என் ஜாதி, என் பாஷை என்று நமக்குள்ளேயே சண்டைகள் ஒருகாலும் வராது. ஐக்கியப் பிரசங்கம் அதிகமான இப்போதுதான் நமக்குள்ளேயே ஒரு சீமைக்காரன் இன்னொரு சீமைக்காரனுக்குத் தண்ணீர் தரமாட்டேன், தானியம் தரமாட்டேன் என்று பிரிந்து பிரிந்து நிற்கிறான். மாகாணத்துக்கு மாகாணம் எல்லைச் சண்டை வந்திருக்கிறது. பாஷையின் பேரால், ஜாதியின் பேரால் ஏற்கெனவே கொடுமை நடந்ததாக இப்போது கிளப்பி விட்டிருக்கிற பிற்பாடுதான் வாஸ்தவத்தில் பாஷைச் சண்டை, ஜாதிச் சண்டை எல்லாம் வந்திருக்கின்றன. இத்தனைக்கும் காரணம், மத உணர்ச்சி, பக்தி போனதுதான். எனவே இப்போது சர்வ ரோக நிவாரணியும் பக்திதான். உண்மையான ஈசுவர பக்தியானது, அவன் குழந்தைகளான சகலரிடமும் அன்பாகத்தான் பரிணமிக்கும். அப்புறம் பரஸ்பர சகாயத்தைத் தவிர வேறெதற்கும் இடமே இராது. 'அன்பே சிவம்' என்கிறார் திருமூலர். அதுவே அறிவு. 'அறிவான தெய்வமே' என்றார் தாயுமானவர். இந்த அன்பையும் அறிவையும் அன்னபூரணி நமக்கெல்லாம் பிட்சை போடப் பிரார்த்திப்போம்.



# காசிக்குச் செல்வோம்

எம். பக்தவத்ஸலம்

சுதந்திரப் போராட்டத்தில் காந்திய சகாப்தம் தொடங்குவதற்கு முன்பு, பாலகங்காதர திலகர், டாக்டர் அன்னிபெஸண்ட் போன்றவர்களின் தலைமையில் ஹோம்ரூல் இயக்கம் தீவிரமாக நடைபெற்றது. அப்பொழுது, அந்த இயக்கத்தை முறியடிக்கும் நோக்கத்தோடு, ஆட்சியாளர்கள் 'பல மொழிகள் பேசுகின்றவர்களும் பல சமயங்களைச் சேர்ந்தவர்களும் எப்படி ஒரு நாட்டினராக இருக்க முடியும்?' என்று கேட்டு மக்களைப் பிரிக்க முயன்றார்கள். அவ்வமயம் டாக்டர் அன்னிபெஸண்ட் 'இந்தியா ஒரு நாடா?' என்ற ஒரு சிறிய ஆங்கில நூலை வெளியிட்டார். அது லண்டனில் பிரசுரிக்கப்பட்டது.

அதில் புள்ளிவிவரங்களுடன் ஆணித்தரமாக இந்தியா ஒரு நாடுதான் என்று நிரூபிக்கப்பட்டது. அந்த நூல் பிரதியின் விலை நாலணாதான். அதைச் சென்னையில் என்னைப் போன்ற மாணவர்கள் எல்லாம் வாங்கிப் படித்துக் கையில் வைத்துக் கொண்டோம். ஆனால் ஆட்சியாளர்களுக்கு அது பொறுக்க வில்லை. இந்த நூல் ஆட்சேபகரமானது என்று, விற்பதற்கோ வாங்கி வைத்துக் கொள்வதற்கோ தடை விதிக்கப்பட்டது. ஆனால் அந்தத் தடையை யாரும் பொருட்படுத்தவில்லை.

அசோகனும், அக்பரும், சிவாஜியும் நம் நாட்டின் ஒருமைப்பாட்டை உணர்ந்து அதை நிலைநாட்டப் பார்த்தார்கள். நம் ஆழ்வார்களும் நாயன்மார்களும் ஆசாரியார்களும் இமயம் முதல் குமரி வரையில் சஞ்சாரம் செய்து அதுதான் நம் நாடு என்று நமக்கு உணர்த்தினார்கள்.

ஆதிசங்கரர் காஷ்மீரத்தில் ஸ்ரீநகரிலுள்ள மலையின் உச்சியின் மீது ஒரு கோயிலை ஸ்தாபித்தார். ஆழ்வார்களும் நாயன்மார்களும் மங்களாசாஸனம் செய்த திருக்கோயில்கள் வடகோடியிலிருந்து தென் கோடி வரையில் பாரதம் முழுதும் பரவியிருக்கின்றன.

நம் நாட்டின் ஒருமைப்பாட்டை வற்புறுத்துவது நம் கலாசாரமே. ஸ்ரீராம நவமியோ அல்லது நவராத்திரியோ அல்லது தீபாவளியோ அல்லது பொங்கல் பண்டிகையோ பாரதம் எங்கும் கொண்டாடப்படுவதை நாம் காண்கிறோம்.

பொங்கல் பண்டிகை தமிழ் மக்களின் ஏகபோக உரிமை என்று சிலர் நினைக்கிறார்கள். நான் ஒரு முறை சங்கராந்தி அன்று காலையில் உதயபுரியில் ரயில் ஏறி அகமதாபாத் செல்ல வேண்டியிருந்தது. அன்று முற்பகலில் ஒவ்வொரு ரயில்வே நிலையத்திலும் நான் கண்டது கையில் ஒரு கரும்புக் கோலோடு ரயிலுக்கு வருகின்றவர்களையும் போகிறவர்களையும் நான் கண்டேன்.



# ராமேசுவரத்துக்கு அழைப்போம்!



மராட்டியர்கள் விநாயக சதுர்த்தியை ஒரு தேசிய விழாவாக, கோலாகலமாகக் கொண்டாடுகிறார்கள். கார்த்திகைப் பண்டிகை அன்று ஒரு முறை நான் தில்லியில் இருந்தேன். தீபம் வைப்பதற்கு மண் அகல்களை ஹிந்திக்காரர்கள் அதிகமாக வாங்குவதை நான் பார்த்தேன். காசி க்ஷேத்திரமும் ராமேசுவரமுமே நம் நாட்டின் ஒருமைப்பாட்டைச் சித்திரிக்கின்றன. வடநாட்டினர் ராமேசுவரம் வந்து போவதும் தென்னாட்டினர் காசிக்குப் போய் வருவதும் தொன்றுதொட்டு நடைபெற்றுக் கொண்டு வருவன. டாக்டர் ராஜேந்திர பிரசாத் காங்கிரஸ் தலைவராக இருந்தபோது, அவரை அழைத்துக் கொண்டு திருநெல்வேலி சென்றிருந்தேன். திருநெல்வேலியிலிருந்து கன்யாகுமரிக்குப் போகத் திட்டமிடப்பட்டிருந்தது. அவர் என்னிடம் கவலையோடு கேட்டார்: 'தோத்தாத்திரி ஸ்வாமி ஸ்தலம் அருகில் இருக்கிறதா?' என்று! அது நாங்குநேரி திருக்கோயிலைத்தான் குறிப்பிடுகிறது என்பது எனக்குத் தெரியும். 'கன்யாகுமரி போகிறவழியில் நாம் அந்தத் திருக் கோயிலுக்கும் செல்வோம்' என்று நான் அவருக்கு உறுதி கூறினேன். அந்தக் கோயிலில் காட்சி அளிக்கும் பெருமான் தங்கள் குலதெய்வம் என்றும் தம்முடைய சுற்றுப் பயணத்தில் அந்தக் கோயிலுக்குத் தவறாமல் போய் வர வேண்டும் என்று தம் அன்னை கூறியதாகவும் அவர் தெரிவித்தார்.

ராமாயணம், மகாபாரதம் போன்ற நமது இதிகாசங்கள் பாரதத்தின் பொது பொக்கிஷங்களாக விளங்குகின்றன. இவைகளை அநுபவிக்காதவர்கள் பாரதத்தில் இல்லை என்று சொல்லலாம்.

அந்நிய ஆட்சியை அகற்றக் காங்கிரஸ் தோன்றியபொழுது, அந்தத் தேசிய ஸ்தாபனம் மக்களுடைய ஒற்றுமை உணர்ச்சியை மேலும் வளர்த்தது. அந்த ஒருமைப்பாட்டின் அடிப்படையில்தான் எல்லோரும் சேர்ந்து, காங்கிரஸ் குடையின் கீழ் நின்று போராட்டம் நடத்தி வெற்றி பெற்றோம். காங்கிரஸ் வியவகாரங்களை நம் தாய் மொழியில் நடத்த வேண்டும் என்ற சீரிய வழியைக் காட்டியவர் காந்தி அடிகள், காந்தி அடிகள் தலைமைக்கு முன்பு காங்கிரஸ் சாதாரணமாக ஆங்கிலத்தில்தான் நடைபெறும். மொழிவாரிப் பிரதேசங்களும் தமிழ்நாடு காங்கிரஸ் போன்றவையும் காந்தி அடிகளின் வழியைப் பின்பற்றித்தான் ஏற்பட்டன. இது பின்னால் வந்த மொழிவாரி ராஜ்யங்களுக்கு முன்னோடியாக இருந்தது. மொழிகள் பல பேசப்பட்டாலும், வேறு வேறு சமயங்களைச் சார்ந்தவராயினும், அதுவே நம் ஒருமைப்பாட்டுக்குச் சிறப்பை அளிக்கிறது என்று ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு ஒரு முறை கூறினார். நம் அரசியல் சாஸனத்தைச் செய்த அறிஞர்கள் மத்திய அரசு பலம் பொருந்தியதாக இருக்க வேண்டும் என்ற அடிப்படையை வற்புறுத்தினார்கள். பரந்த இந்த நாட்டுக்கு மத்திய அரசு 'என்றும் மாநில ஆட்சி என்றும் இரு கோணங்களில் மக்கள் நலன் கவனிக்கப்பட வேண்டும் என்ற வகையில் ஏற்பட்டிருக்கும் அமைப்பின் தன்மையை நாம் உணர வேண்டும். இரு அரசுகளும் ஆட்சி செலுத்துவது அதே மக்களின் மீதுதான். ஆனால் இந்த ஜனநாயகத்தில் மக்கள் தங்களையே ஆண்டு கொள்ளும் தன்மையை நாம் உணருகின்றோம். மொழியால் நாம் தமிழர்கள் என்றாலும் தேசிய வகையில் நாம் பாரதப் புதல்வர்கள் என்பதை உணருகிறோம். சோவியத் யூனியனில் பிரதேசங்கள் ஒவ்வொன்றும் குடியரசு என்றே அழைக்கப்படுகிறது. எனினும், தாஷ்கண்டிலுள்ளவர்களோ, கீவ் நகரத்தில் உள்ளவர்களோ தாங்கள் ருஷ்ய மக்கள் என்பதை உணரத் தவறுவதேயில்லை. அவ்வாறே இந்நாட்டின் பல்வேறு மாநில மக்களும் தாங்கள் இந்தியர் என்பதை உணரத் தவறுவதில்லை என்றாலும் சிறு சக்திகள் இங்கும் அங்கும் நடமாடுகிற நிலையில் நாம் அப்போதைக்கப்போது நம் ஒருமைப்பாட்டு உணர்ச்சியை வற்புறுத்துவது அவசியம் ஆகும்.



# அருமபெரும் புதிய ஃபாஷன்.



# லக்மே லிப்ஸ்டிக்ஸ் மற்றும் நெய்ல் இனாமல்.

ஆழ்ந்து, பளிச்சிடும் லிப்ஸ்டிக் எங்கே என்ற ஆர்வம் எங்கும். புதிய லக்மே அல்ட்ரா-க்ரீம், அல்ட்ரா-ஃப்ராஸ்ட், அல்ட்ரா-க்ளோ, லிப்ஸ்டிக்ஸ் வருகின்றன, வசீகர ஃபாஷன்களில், சிவப்பு, ஸ்கார்லட், மற்றும் பழுப்பு நிறங்களில்.

அழகுச் சிகரமாக்கும் லக்மே இனாமல்— இதைக் கண்டு மயங்குவீர்.



**ஸ்பானிஷ் போர்ட்**

மனம் மயக்கும் ரோஜா நிற லிப்ஸ்டிக். அதோடு ஸ்பானிஷ் போர்ட் நெய்ல் இனாமல் வேண்டுமெனக் கேளுங்கள்.

**பர்கண்டி ரெட்**

இந்த உற்சாகமூட்டும் ரெட் லிப்ஸ்டிக் தடவி, ஃபாஷன் உலகில் கிளர்ச்சி மூட்டுங்கள். அதற்குப் பொருந்தும் பர்கண்டி ரெட் நெய்ல் இனாமலும் தடவுங்கள்.

**கோன்யாக் ப்ரௌன்**

இந் நிறம் உங்கள் உதடுகளையும், நகங்களையும் பிறர் போற்றச் செய்யும்.

**க்ளாரெட் ரெட்**

தூங்கிவழியாமல், விழிப்பூட்டித் துடிப்பூட்டும் இந் நிறத்தில், உதடுகளும், நகங்களும் துறுதுறுவென்றிருக்கும்.

லக்மே லிப்ஸ்டிக்ஸ், ஐரோப்பா, அமெரிக்கா, இன்னும் பல நாடுகளுக்கும் ஏற்றுமதியாகின்றன.

# கலைகள் வளரட்டும்; ஒருமைப்பாடு கனியட்டும்!



**. ருக்மிணி தேவி.**

இதை எழுதத் தொடங்கும் போது என் மனத்தில் முதலில் எழும் எண்ணம் பகவான் எப்பொழுது அவதாரம் எடுத்து இந்நாட்டை உய்விக்கப் போகிறான் என்பதுதான். தேசத்தில் இன்று காண்பது போன்ற சீரழிவை நான் என்றுமே கண்டதில்லை.

பாரதப் பண்பாடு புகழ் பெற்றது. அதன் ஆன்மீகச் செல்வம் மட்டுமின்றிப் பொருளாதாரச் செல்வமும் மிகப் பிரசித்தம். மேற்கத்திய நாடுகள் நம் பொருட் செல்வத்தைப் பறித்துக் கொண்டு சென்றன. கிழக்கத்திய நாடுகள் நமது பண்பாடு, கலை, நாகரிகம், ஆன்மீகச் செல்வம், நமது ரிஷிகளின் போதனைகள் முக்கியமாகப் பகவான் புத்தரின் அருளுபதேசம் ஆகியவற்றை ஏற்றுக் கொண்டன. பகவான் புத்தர் தமது உடலை விடும் போது, ''இதுவும் அழியும்'' என்றார். ''இதுவும்'' என்று அவர் குறிப்பிட்டது தமது உடலை மட்டுமல்ல, நமது கலை, பண்பாடு, சமயம் ஆகிய எல்லாவற்றையுமே குறிப்பிட்டாரோ என்று எனக்குத் தோன்றுகிறது.

எனினும், நாம் பெற்றுள்ள அறச் செல்வம் அவ்வளவு சுலபமாக அழியக் கூடியதல்ல. ஏதோ ஒரு தலைமுறையினர் அதை அலட்சியப்படுத்தினாலும் அது நம்மைவிட்டு நீங்காது என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. இந்தியாவை முஸ்லிம்கள் ஆண்டார்கள்; பின்னர் கிறிஸ்தவர்கள் ஆண்டார்கள். மேல்நாட்டு நாகரிகம் நம்மை ஆட்கொண்டது. இருப்பினும் ஹிந்து சமயம் இவற்றில் உள்ள நல்ல அம்சங்களையெல்லாம் தனதாக்கிக் கொண்டு பட்டை தீட்டிய வைரமாக ஜொலிக்கிறது!

இன்று நமது விரோதிகள் வெளியே இருந்து வரவேண்டியதில்லை. உள்நாட்டிலேயே அவர்கள் இருக்கிறார்கள்!

என்னைப் பொறுத்தவரை மதமும் கலையும் ஒன்றே. மதம், இறைப் பற்று என்பன ஒருவனைத் தனக்குள்ளே பார்க்கச் செய்கிறது. கலை என்பது உள்ளே அவன் கண்ட தெய்விகத்தின் — வெளிப்படையான தோற்றமாகிறது. இது மெய் சிலிர்ப்பை ஏற்படுத்துகிற உண்மையாகும். இதை நாம் சரிவரப் புரிந்து கொண்டுவிட்டால் நமது கலைகளைச் சரியான முறையில் அப்பியசிக்கலாம்.

நமது பண்பாட்டுக்குப் பெரும் விரோதி அரசியல். உண்மையில் அரசியல் என்பது நம் நாட்டுக் கோடானு கோடி பாமர மக்களுக்கு இன்பத்தையும் நல்வாழ்வையும் நல்குவதாக இருக்க வேண்டும். ஆனால் நாம் நம் சுயநலன்களைப் பெருக்கிக்கொள்வதில் மிகுந்த அக்கறை காட்டத் தொடங்கிவிட்டோம். விளைவு ஹிந்து சமயம் — எல்லாச் சமய நெறிகளுக்கும் — தாயான ஆன்மீக எண்ணம் சீரழிந்து கிடக்கிறது. அத்துடன் நமது பண்பாடும் நிலைகுலைந்து போய்விட்டது.

சுதந்திரம் அடைந்ததும் நமது அரசியல் நிர்ணயச் சட்டம் நம் நாடு 'சமயச் சார்பற்ற நாடாக இருக்கும் என்று அறிவித்தது. நமக்குச் சமயமே இருக்கக் கூடாது என்பது இதன் பொருளா? அல்லது ஹிந்து சமயம் மட்டும் ஒதுக்கப்பட வேண்டும் என்பது அர்த்தமா? ஓர் அரசியல் கட்சியின் சார்பில் தேர்தலில் நின்று வெற்றி பெற்று மந்திரியான ஒருவர் கோயில்களையும் அதை ஒட்டிய தர்ம ஸ்தாபனங்களையும் நிர்வகிக்கும் பொறுப்பை ஏன் ஏற்க வேண்டும் என்று எனக்குப் புரியவில்லை. ஏழைகளை ஏமாற்றுவது பற்றிப் பேசுகிறோம். சமயச் சார்புள்ள விஷயங்களில் எளியோர்கள் அடையும் ஏமாற்றம்கொஞ்ச நஞ்சம் அல்ல. லட்சக்கணக்கான மக்கள் — முக்கியமாக ஏழைகள் — வெய்யிலிலும் மழையிலும், பசி, பட்டினி பாராமல் குழந்தையையும் சுமந்து கொண்டு ஏழுமலையானைத் தரிசிக்க வருகிறார்கள். இந்த ஏழை மக்கள் செலுத்தும் காணிக்கைகள் மொத்தத்தில் லட்சக்கணக்கில் இருக்கின்றன. அதைக் கொண்டு ஒரு தொழிற்சாலையோ கல்லூரியோ தொடங்கப்படுகிறது. அக் கல்லூரியில் மருந்துக்குக் கூட ஹிந்து மத போதனை செய்யப்படுவதில்லை. ஏனெனில், நம் ஆட்சி மதச் சார்பற்றது!

வழிவழியாக வந்துள்ள நமது உன்னதமான கொள்கைகளில், தீவிரப் பிடிப்பும், அவற்றை நிறைவேற்றத் தைரியமும் உள்ள மக்கள் தேவை. அப்போதுதான் நாம் உண்மையான சுதந்திரம் பெற்றவர்களாவோம்.

('சுயராஜ்யா' கட்டுரையின் சுருக்கம். தமிழாக்கம்: எஸ். வி. எஸ்)



''போதும், இனி ஒரு பிடி அவல் உண்டால் ஆபத்து!'' குசேலோபாக்கியானம் — கலா க்ஷேத்ரா தயாரிப்பில் ஒரு காட்சி.

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லா-வற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பநவீனமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான்முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ள-தோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது. இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**

**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

Sobhagya GR 74-2-Tam.

அமரர் கல்கி

# சிவகாமியின் சபதம்

பதினெட்டாம் அத்தியாயம்

## புலிகேசிக்குத் தெரியுமா?

மறுநாள் மாலை கண்ணபிரானுடைய வீட்டுக் கூடத்தில் ஆயனர், சிவகாமி, கமலி, கமலியின் மாமனார் ஆகியவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். புலிகேசியும் மகேந்திர பல்லவரும் நகர்வலம் வந்தது பற்றியும், அவர்கள் வடக்குக் கோட்டை வாசலில் ஒருவரிடம் ஒருவர் விடைபெற்றுக் கொண்ட காட்சியைப் பற்றியும் புலிகேசி அந்தக்கோட்டைவாசல் வழியாக வெளியேறியது பற்றியும் யோகி அசுவபாலர் மற்றவர்களுக்குச் சொல்லிக் கொண்டிருந்தார். புலிகேசி காஞ்சிக்கு விஜயம் செய்த நாளிலிருந்து அந்த யோகி தமது யோக சாதனத்தை அடியோடு மறந்து நகரில் நடந்த களியாட்டங்களில் ஈடுபட்டிருந்தார் என்பதையும் இங்கு குறிப்பிட வேண்டும்.

மேற்படி பேச்சுக்கு இடையிடையே அங்கே தவழ்ந்து வட்டமிட்டுக் கொண்டிருந்த சின்னக் கண்ணன் அவர்களுடைய கவனத்தைக் கவர முயற்சி செய்தான். கமலியும் அவனுடைய நோக்கத்துக்குத் துணை செய்கிறவளாய்ப் பேச்சை மாற்றி, சின்னக் கண்ணனுடைய பிரதாபங்களை அவர்களுக்கு எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தாள். அப்போதெல்லாம் அசுவபாலர் அவனை, ''ஐயோ! பைத்தியமே! இப்படியும் ஓர் அசடு உண்டா?'' என்று சொல்லும் தோரணையில் பார்த்துவிட்டு, மேலே தமது வரலாற்றைத் தொடங்கினார்.



எல்லாம் முடிந்ததும் சிவகாமி, ''மாமா! வாதாபிச் சக்கரவர்த்திதான் போய்த் தொலைந்து விட்டாரே! கோட்டைக் கதவுகளை இனிமேல் திறந்து விடுவார்கள் அல்லவா?'' என்று கேட்டாள்.

''எல்லாம் நாளை மறுநாள் தெரிந்து விடும், அம்மா! எனக்கென்னவோ அவ்வளவு நம்பிக்கை ஏற்படவில்லை. அந்த வாதாபிச் சளுக்கனுடைய முகத்தில் பத்து நாட்களாக இருந்த முகமலர்ச்சியை இன்றைக்குக் காணோம். பல்லவரிடம் விடைபெற்று வெளியே போகும் சமயத்தில் முகத்தைக் கடுகடு வென்று வைத்துக் கொண்டிருந்தான். அந்த ராட்சதன் என்ன செய்கிறானோ, என்னவோ?''

''அப்படி என்ன செய்து விடுவான்?'' என்று சிவகாமி கேட்டாள்.

''மறுபடியும் அவன் கோட்டையை முற்றுகை போடத் தொடங்கலாம்; அல்லது கோட்டையைத் தாக்கிப் பிடிக்க முயலலாம்.''

''அப்படியெல்லாம் செய்வார்களா, என்ன? இத்தனை நாட்கள் இவ்வளவு சிநேகம் கொண்டாடிவிட்டு!'' என்று சிவகாமி வியப்புடன் கேட்டாள்.

''தங்கச்சி! இது என்ன நீகூட இப்படிக் கேட்கிறாயே! இராஜ குலத்தினருக்கு வியவஸ்தை ஏது? இன்றைக்குச் சிநேகிதர்களாயிருப்பார்கள். நாளைக்குக் குத்திக் கொள்வார்கள். இன்றைக்குப் பெண் கொடுத்துச் சம்பந்தியாவார்கள்; நாளைக்குப் போர்க்களத்தில் சண்டை போடுவார்கள்!'' என்றான் கமலி.

ஆயனர், அசுவபாலரைப் பார்த்து, ''வாதாபி அரசருக்கு என்ன கோபமாம்? ஏதாவது தெரியுமா?'' என்று கேட்டார்.

''சளுக்கனும் பாண்டியனும் சிநேகிதர்களாம். கொள்ளிடக் கரையில், இரண்டு பேரும் ரொம்ப உறவு கொண்டாடினார்களாம். சளுக்கன் இங்கே வந்திருக்கும்போது, மாமல்லர் பாண்டியன் மீது படையெடுத்துச் சென்றதில் இவனுக்குக் கோபம் என்று சிலர் சொல்கிறார்கள். இன்னும் ஓர் அபிப்பிராயம் என்ன தெரியுமா?..'' என்று அசுவபாலர் நிறுத்தினார்.

''என்ன, சொல்லுங்களேன்?'' என்றார் ஆயனர்.

''சிவகாமியின் நடனத்தைப் பார்த்து விட்டு மயங்கிப் போய் வாதாபி அரசர் சிவகாமியைத் தம்முடன் அனுப்பும்படி கேட்டாராம். பல்லவேந்திரர் மறுத்து விட்டாராம்! — அதனால்தான் புலிகேசிக்குக் கோபமாம்!'' என்றார் அசுவபாலர்.

''அவன் நாசமாய்ப் போக! அவன் தலையில் இடிவிழ!'' என்றாள் கமலி அழுத்தந் திருத்தமாக.

அப்போது, ''ஆஹா! இவ்வளவு திவ்யமான ஆசீர்வாதம் யார் வாயிலிருந்து வருகிறது?'' என்று ஒரு குரல் கேட்டதும், அனைவரும் திடுக்கிட்டு எழுந்து நின்று குரல் வந்த பக்கத்தைப் பார்த்தார்கள். அந்தக் கம்பீரமான குரல் சின்னக் கண்ணனுடைய கவனத்தைக் கூடக் கவர்ந்து விட்டதாகத் தோன்றியது. அவனும் உட்கார்ந்தபடியே ஆவலுடன் குரல் வந்த திசையை நோக்கினான்.

வீட்டின் பின் வாசல் வழியாக உள்ளே வந்தவர் வேறு யாருமில்லை! மகேந்திர பல்லவ சக்கரவர்த்திதான்.

''அசுவபாலரே! நீர் சொல்லிக் கொண்டிருந்த வதந்தி என் காதிலும் விழுந்தது. ஆனால், அது உண்மையல்ல. வாதாபிச் சக்கரவர்த்தி சிவகாமியைத் தம்முடன் அனுப்பும்படி என்னைக் கேட்கவில்லை. பின்னே என்ன சொன்னார் தெரியுமா? 'இந்தப் பெண்ணுக்கு என்னவோ இவ்வளவு பிரமாத மரியாதை செய்கிறீர்களே? என்னுடன் வாதாபிக்கு அனுப்பினால் சாட்டையினால் அடித்து நாட்டியம் ஆடச் சொல்வேன்!' என்றார். அவ்வளவு ரஸிகசிகாமணி அந்த மூர்க்கப் புலிகேசி!'' என்றார் சக்கரவர்த்தி. அப்போது அவருடைய கண்களில் உண்மையான கோபத்துக்கும் வெறுப்புக்கும் அறிகுறி காணப்பட்டது.

அப்போது சிவகாமி ஓர் அடி முன் வந்து சக்கரவர்த்தியை ஏறிட்டுப் பார்த்து, ''பிரபு! அப்பேர்ப்பட்ட பரம ரஸிகரின் முன்னிலையிலே என்னை நாட்டியம் ஆடச் சொன்னீர்களே! அது தர்மமா?'' என்று கம்பீரமாகக் கேட்டாள்.

''அது தவறுதான் குழந்தாய்! புலிகேசியின் முன்னால் உன்னை நான் ஆடியிருக்கச் சொல்லக் கூடாதுதான். ஆனால் நான் கண்டேனா? அஜந்தாவின் அற்புத வர்ணச் சித்திரங்கள் எவனுடைய இராஜ்யத்தில் உள்ளனவோ, அவன் இப்பேர்ப்பட்ட ரஸிகத் தன்மையற்ற மூர்க்கனாயிருப்பான் என்று நான் நினைக்கவில்லை. ஆயனரே! ஒரு செய்தி கேட்





மரா? காஞ்சிக் கோட்டைக்கு வெளியே இத்தனை மாதங்கள் சளுக்கச் சக்கரவர்த்தி தண்டு இறங்கியிருந்தாரல்லவா? ஒரு தடவையாவது மாமல்லபுரத்துக்குப் போய் அவர் பார்க்கவில்லையாம்! நான் கேட்டதற்கு, 'உயிருள்ள மனிதர்கள் இருக்கும்போது வெறுங் கல் பதுமைகளை யார் போய்ப் பார்த்துக்கொண்டிருப்பது?' என்று விடை சொன்னார். இது மட்டுமா? 'அஜந்தாவிலே அப்படி என்ன பிரமாதமாயிருக்கிறது? சுவரில் எழுதிய வெறும் சித்திரங்கள்தானே?' என்றார். இப்பேர்ப்பட்ட மனுஷரிடம்தான் அஜந்தா வர்ண இரகசியத்தை அறிந்து வரும் பொருட்டு நாகநந்தியின் ஓலையுடன் பரஞ்சோதியை நீர் அனுப்பி வைத்தீர். உமக்கு அது ஞாபகம் இருக்கிறதா?'' என்று மகேந்திர பல்லவர் ஆயனரை நோக்கிக் கேட்டார்.

ஆயனருக்கு அப்போது உண்டான அளவு கடந்த ஆச்சரியத்தை அவருடைய முகக் குறி காட்டியது. ''பல்லவேந்திரா! உண்மையாகவா? வாதாபி சக்கரவர்த்திக்கா நாகநந்தி ஓலை கொடுத்து அனுப்பினார்? இது தங்களுக்கு எப்படி...?'' என்று தயங்கினார்.

''... எப்படித் தெரிந்தது என்று தானே கேட்கிறீர்? ஓலையை நானே படித்துப் பார்த்தேன். ஆனால், நாக



நந்தி ரஸிகர். இந்த மூர்க்கப் புலிகேசியைப் போன்றவர் அல்ல. அவர் என்ன எழுதியிருந்தார் தெரியுமா? 'சைனியத்துடன் சீக்கிரம் வந்து பல்லவ ராஜ்யத்தையும் காஞ்சிசுந்தரியையும் நீ கைப்பற்றிக்கொள். சிவகாமியை மட்டும் எனக்குக் கொடுத்துவிடு!' என்று எழுதியிருந்தார். எப்படி யிருக்கிறது விஷயம்? ஆயனரே! உம்முடைய அத்தியந்த சிநேகிதர் நாகநந்தியினால் இந்தப் பல்லவ இராஜ்யத்துக்கு எப்பேர்ப்பட்ட ஆபத்து வருவதற்கு இருந்தது தெரியுமா?'' என்றார் சக்கரவர்த்தி.

ஆனால், ஆயனரோ சக்கரவர்த்தி கடைசியாகக் கூறிய வார்த்தைகளைக் கவனித்தவராகக் காணப்படவில்லை. வேறு ஏதோ யோசனையில் ஆழ்ந்தவராகக் காணப்பட்டார். ''ஆஹா! புத்த பிக்ஷு கொடுத்த ஓலை வாதாபிச் சக்கரவர்த்திக்கா? அப்படியானால், அஜந்தா வர்ண இரகசியம் புலிகேசி மகாராஜாவுக்குத் தெரியுமா?'' என்று தமக்குத் தாமே மெதுவான குரலில் சொல்லிக் கொண்டார்.

ஆயனர் அஜந்தா வர்ண இரகசியத்தில் மனத்தைச் செலுத்திக் கொண்டிருக்கையில் சக்கரவர்த்தி, அசுவபாலரைப் பார்த்து, ''என்ன யோகியாரே! யோகப் பயிற்சியெல்லாம் இப்போது எப்படியிருக்கிறது? இந்த வாதாபி மன்னர் வந்தாலும் வந்தார்; யோக சாதனத்தில் மனத்தைச் செலுத்தவே அவகாசம் இல்லாமல் போய்விட்டது!'' என்று கூறிக் கண்களினால் சமிக்ஞை செய்யவே, அசுவபாலர் சக்கரவர்த்தியைப் பின்தொடர, இருவரும் வீட்டுக்குப் பின்னால் அரண்மனை உத்தியான வனத்தில் இருந்த யோக மண்டபத்துக்குச் சென்றார்கள்.

அவர்கள் போனதும், சிவகாமி கமலியைப் பார்த்து, ''அக்கா! சக்கரவர்த்தி கற்ற கலை எல்லாம் போதாதென்று யோகக் கலை வேறு கற்றுக் கொள்ள ஆரம்பித்திருக்கிறாரா?'' என்று கேட்டாள். அதற்குக் கமலி, கண்ணை விஷமமாகச் சிமிட்டிக் கொண்டே இரகசியம் பேசும் குரலில், ''யோகமாவது, மண்ணாங்கட்டியாவது! எல்லாம் மோசம்! அப்புறம் சொல்கிறேன்'' என்றாள்.

(தொடரும்)

---

**அன்பின் உரிமையா; அபராதமா?**

ராஜஸ்தானைச் சேர்ந்த மார்வாரிகள் கல்யாணத்தில் மாப்பிள்ளைகள் மணமேடைக்குக் குதிரைமேல் ஏறிச் செல்வர். மாப்பிள்ளையின் சகோதரிகள் மணமேடைக்குச் செல்லும் சமயத்தில் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு அவர்கள் கேட்கும் பணத்தையோ, தங்கத்தையோ கொடுத்தால்தான் மேலே செல்ல விடுவார்கள்!

- லலிதா சுந்தரராமன்



# நல்வரவு கூறுகின்றோம்

சேலையின் நிறமும், நீடிய உழைப்பும், கலை நுணுக்கமும்
கவினும் நிறைந்த காஞ்சிபுரம் பனாரஸ் முதலிய
உயர்தரப் பட்டுப் புடவைகளுக்கும்
கைத்தறி மில் ஜவுளிகளுக்கும்
மிகச் சிறந்த இடம்

## மைலாப்பூர்
# சாந்தி


# சில்க் எம்போரியம்

Rajathi

**சென்னையில் புத்தம் புது பட்டு ஜவுளி மாளிகை**

5, சன்னதி தெரு, (கபாலீச்சரம் சன்னதி அருகில்) மைலாப்பூர், சென்னை-600 004. போன்: 74403
ஞாயிற்றுக்கிழமைகளிலும் விற்பனை உண்டு.
ரூ. 200/-க்கு மேல் புடவை வாங்கினால் அழகிய பரிசு வழங்குகிறோம்.
மதுரையில் காலேஜ் ஹவுஸில் எங்களது தற்காலிக ஷோ-ரூம் தீபாவளி வரை திறந்து இருக்கும்

# ஒருமைப்பாட்டுக்கு அடிப்படைத் தேவைகள்:

# உணவு, அழகு, புரட்சி!

கே. ஏ. அப்பாஸ்

படிப்பறிவுள்ள சராசரி இந்தியனுக்குக் கூட காளிதாசனைவிட அதிகமாக ஷேக்ஸ்பியரைப் பற்றித் தெரியும். துளசிதாஸரைவிட அதிகமாக டென்னிஸன் பற்றித் தெரியும். பிரெஞ்சு ஓவியங்களைப் பற்றித் தெரியும், ஆனால் அஜந்தா ஓவியங்களைப் பற்றி அதிகம் தெரியாது. எப்ஸ்டைன் பற்றித் தெரியும், எல்லோரா சிற்பங்களை அறியார்கள். கதகளி, பரதநாட்டியத்தை விட அதிகமாக வால்ட்ஸ், டாங்கோ பற்றித் தெரிந்து வைத்திருப்பார்கள். இந்த ஒப்பற்ற நிலைமைக்கு நாம் ஆங்கிலக் கல்விக்கு நன்றி செலுத்தவேண்டும்!

மிக உயர்ந்த கல்வி அறிவு பெற்றுள்ள ஆயிரக் கணக்கான வட இந்தியர்கள் கதக்களி — பரதநாட்டியம் பற்றியோ, வள்ளத்தோல்—பாரதி குறித்தோ, மதுரை — மகாபலிபுரம் கோவில் சிற்பங்கள் பற்றியோ அடிப்படை விஷயங்களைக்கூட அறியார்கள்.

அதேபோல் கல்வி அறிவு பெற்றுள்ள ஆயிரம் ஆயிரம் தென் இந்தியர்களுக்கு காளிபும் இக்பாலும், மோஹன் சிங்கும், அமிர்தா பிரீதமும், பிரேம்சந்தும், சுமித்ரா நந்தன் பந்தும் கேள்விப்படாத பெயர்களாயிருக்கும் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை.

மாஸ்கோ, லெனின்கிராட் பல்கலைக் கழகங்களில்; ஏன், அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில்கூட யுவர்களும் யுவதிகளும் இந்திய மொழிகளைக் கற்கிறார்கள். ஹிந்தி, பஞ்சாபி, தமிழ், வங்க இலக்கியங்களைப் பயில்கிறார்கள்.

ஆனால் நமது நாட்டின் பல்கலைக் கழகங்களிலே பிற மாநில மொழிகள், கலைகளைப் பற்றிச் சொல்லிக் கொடுக்கும் பிரிவுகள் எத்தனை இருக்கின்றன?

இது ஒரு குற்றச்சாட்டோ அல்லது விமர்சனமோ அல்ல. வடக்குக்கும் தெற்குக்கும் இடையே பரவலானதும் நெருக்கமானதுமான கலாசாரத் தொடர்புகள் நிலவ வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தவே இதைக் கூறுகிறேன்.

சர்வதேச கலாசாரத் தொடர்புகளை வளர்க்கும் உன்னத நோக்கத்துடன் பல நிறுவனங்கள் நம்மிடையே உள்ளன. இந்திய—சோவியத் கலாசாரக் கழகம், இந்திய—அராபிய நட்புறவுச் சங்கம் எல்லாம் உள்ளன. ஏன் ஒரு 'வடக்குத் தெற்கு கலாசாரக் கழகம்' அமையக் கூடாது?

வடக்குக்கும் தெற்குக்கும் ஒரு தொடர்பற்ற நிலை முன் காலத்தில் இருந்ததை நாம் புரிந்து கொள்ள முடியும். விந்திய மலைகள் இடையில் குறுக்குச் சுவராய் நின்றன. ஆனால் சாலைகளும் ரயில் பாதைகளும் வடக்கையும் தெற்கையும் இணைத்தன. சுதந்திர இயக்கம் ஓர் அரசியல் பிணைப்பையும் ஏற்படுத்தியது. அதன் உருவகமாக தென் இந்திய ராஜாஜி சுதந்திர பாரதத்தின் முதல் கவர்னர் ஜெனரலானார்; வட இந்திய நேருஜி முதல் பிரதமரானார். இன்று விந்திய மலைகள் மீதாக விமானங்கள் பறக்கின்றன. காலையில் காப்பி அருந்திவிட்டு டில்லியிலிருந்து புறப்பட்டால் காலை ஆகாரத்துக்குச் சென்னை வந்துவிடலாம். புதிய பொருளாதார சூழல் வடக்கும் தெற்கும் அடிக்கடி சந்திக்க வழி வகுத்துள்ளது. பஞ்சாப், பக்ரா — நங்கல் திட்டத்தில் நூற்றுக் கணக்கான தென்னிந்தியர்கள் வேலை பார்த்தார்கள். தெற்கே திருவனந்தபுரம் வரையில் பஞ்சாபிகள் சென்று வேலை பார்த்து வாழ்கிறார்கள்.

ஆயினும் இன்னமும் விந்திய மலைகள் இருக்கத்தான் செய்கின்றன. அவை பௌதிக



ரீதியில் மட்டும் குறுக்குச் சுவராக இல்லை. நட்புறவுக்கும், கலாசாரத் தொடர்புக்கும் தடுப்புச் சுவராய் உள்ளன. வடக்கையும் தெற்கையும் தனிமைப்படுத்தும் விந்திய மலைகளைக் கடந்து நாம் ஒருவரை யொருவர்

புரிந்து கொள்ள வேண்டும். இதில் மதமதார்ப்போ, அறியாமையோ, துவேஷமோ காட்டக் கூடாது.

## யாதும் ஊரே ...

'நான்கு கடல்களுக்குள் வாழும் அனைவரும் சகோதரர்களே' என்று பண்டைக் காலச் சீனத்தின் அறிவு கூறியது. இதையே எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்னால் தமிழ் அறிஞர் ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்று எடுத்துரைத்தார்.


கே. ஏ. அப்பாஸ்

ஆனால் இன்றையக் காலத்தின் கோலம், இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் வசிக்கும் நாம், பழங்காலக் கலாசாரங்களின் பெருந்தன்மை மிக்க மனிதாபிமானக் கொள்கைகளை மறந்து விட்டோம். இவ்விஷயத்தில் யாரும் இன்னொருவரைக் குற்றம் சொல்ல முடியாது. தவறே இல்லாதவன் முதலில் கல்லெறியத் துணியட்டும்!

பஞ்சாபிகள் வாரிஸ் ஷாவின் ஹீர் கூறியுள்ள அன்புச் செய்தியை விட்டு விட்டார்கள்; சீக்கியர்கள் குருநானக் கூறிய சகிப்புத் தன்மையை அலட்சியம் செய்தார்கள்; முஸ்லிம்கள் இஸ்லாமியத்தின் மனிதாபிமானத்தையும், உலக நோக்கையும் ஏறிட்டும் பார்ப்பதில்லை; வாரணாசி பண்டிதர்கள் கபீர்தாஸரின் நுட்பமான தத்துவங்களை மறந்தே போனார்கள்; தாகூரின் எழிலும் நயமும் மிக்க கவிதைகள் எத்தனை வங்காளிகளின் உள்ளங்களில் இன்று எதிரொலியை ஏற்படுத்துகின்றன?

இப்படியே நான் எவ்வளவோ கூறிக் கொண்டு போகலாம். நான் வலியுறுத்த விரும்பும் விஷயம் என்னவென்றால் எங்கு பார்த்தாலும், உண்மையின் குரல், அன்பின் குரல், மனிதாபிமானத்தின் குரல் ஆகியவை மொழி வெறி, பிரதேசப் பித்து இவற்றின் கர்ஜனைகளில் இருக்குமிடம் தெரியாமல் மூழ்கிப் போய்விட்டன.

இந்தச் சூழலில் தமிழ் மொழி, தமிழ் இலக்கியம், தமிழ்ப் பண்பாடு இவற்றின் தாய்மையகத்திலும் கூட 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற சொற்றொடர் வெறும் கோஷமாக, தபால் தலையில் அச்சாக வேண்டிய விஷயமாக ஆகிவிட்டதில் வியப்பென்ன?

கடவுள் நம்பிக்கையும் தெய்வ பக்தியும் மாபெரும் ஆலயங்களை எழுப்பியுள்ள தமிழகத்தில், தேசத்தின் எல்லாத் திசைகளிலிருந்தும் இந்தக் கோவில்களுக்குப் பக்தர்கள்





அமரர் கல்கியின் நூல்களை ஜெர்மன், ரஷ்யன் போன்ற உலக மொழிகளிலும் உள்நாட்டுப் பாஷைகளிலும் மொழி பெயர்த்து அளித்தவர்கள் பலர் உள்ளனர். இன்றைக்கும் இப்பணி தொடர்கிறது.

வடக்கே பிறந்து, தமிழ் கற்று அமரர் கல்கியின் இலக்கிய நூல்களைத் தற்போது குஜராத்தியிலும் ஹிந்தியிலும் மொழிபெயர்த்து வரும் இருவரை இங்கு நேயர்களுக்கு அறிமுகப்படுத்துகிறோம்.

ஹிந்தி பேசும் பிரதேசங்களில் வசிப்பவர்களுள் தமிழ், ஹிந்தி இலக்கியங்களை ஒப்பு நோக்கி எழுதிய முதல் நபர் ராமேஷ்வர் தயாள் அக்ரவால். மீரட்டில் வசிக்கும் இவர் தேசிய ஒருமைப்பாட்டுக்கு உதவும் நோக்குடன் கம்ப ராமாயணத்தையும் துளசி ராமாயணத்தையும் ஒப்பு நோக்கி ஆராய்ச்சி நூல் எழுதி டாக்டர் பட்டமும் பெற்றிருக்கிறார். 'கம்பனின் காவியக் கொள்கை' என்ற தலைப்பில் கலைமகளில் இவர் வரைந்த கட்டுரை இலக்கிய வட்டாரங்களின் கவனத்தை வெகுவாகக் கவர்ந்தது. தற்போது 'சிவகாமியின் சபத'த்தை ஹிந்தியில் மொழி பெயர்க்கும் பணியில் ஈடுபட்டுள்ளார்.

# 'கல்கி' அன்பர்கள் இருவர்



ஆமதாபாதத்தில் வாழும் 'நவநீத மதராஸி' 'கல்கி'யின் கள்வனின் காதலி நாவலைக் குஜராத்தியில் மொழிபெயர்க்கும் பணியை ஏற்றுச் சமீபத்தில் முடித்து விட்டார். ஏற்கெனவே சாகித்திய அகாதெமி கேட்டுக் கொண்டதன் பேரில் 'பார்த்திபன் கனவு' நூலைக் குஜராத்தியில் மொழிபெயர்த்திருக்கிறார். ''கல்கியின் எல்லா நாவல்களையும் குஜராத்தியில் மொழிபெயர்க்க வேண்டும் என்பதே என் ஆசை'' என்று கூறும் நவநீத மதராஸி — பிறந்தது சென்னையில். ''குழந்தைப் பருவத்தை அங்கு ஆனந்தமாகக் கழித்ததன் நினைவாக 'மதராஸி' என்று பெயர் சூட்டிக்கொள்ளவில்லை; நமது நாட்டிலிருந்து குறுகிய பிரதேசப் பித்து ஒழிய வேண்டும் என்பதற்கு அடையாளமாகவும் அப்படிப் பெயர் வைத்துக் கொண்டேன்'' என்கிறார் நவநீத மதராஸி.

விஜயம் செய்யும்போது, குறுகிய நோக்கில் மொழிப்பற்றை வளர்த்துக் கொண்டிருக்கும் துவேஷப் பிரசாரகர்களின் சிந்தனையற்ற வார்த்தைகளும் ஆவேசக்காரர்களின் சிறுபிள்ளைத்தனமான காரியங்களும் மேற்சொன்ன சொற்றொடரையே அர்த்தமற்றதாகச் செய்துவிட முயலுகின்றன.

மனிதர்களுக்கிடையே நிலவ வேண்டிய உறவுப் பாண்மையை— ஒரு சர்வதேச உண்மையை — விவரிக்கும் அந்த எளிய அழகிய சொற்றொடர் வெறும் தத்துவமோ அல்லது வார்த்தை ஜாலமோ அல்ல. மக்கள் குலத்தின் ஓர் அங்கமாக இந்தியக் குடும்பம் விளங்க வேண்டியதை அற்புதமாகக் கூறுகிறது.

இதையேதான் கௌதம புத்தரின் அடிச்சுவடுகளும் அவரது சீடர்களின் அடிச்சுவடுகளும் உணர்த்துகின்றன. இந்தியாவின் ஆன்மா ராஜ்ய எல்லைகள், மாநிலங்களின் எல்லைகளுக்குள் அடங்குவதல்ல. அது உலகமெல்லாம் பரவி வியாபிப்பது.

இதையேதான் கேரளத்திலிருந்து புறப்பட்ட சங்கரரும் வலியுறுத்துகிறார். தெற்கே ராமேசுவரம், வடக்கே பத்ரிநாத், கிழக்கே பூரி ஜகந்நாத், மேற்கே துவாரகை என்று அவரது தீர்க்க தரிசனத்தில் நாலு புண்ணிய க்ஷேத்திரங்களும் அமைந்தன.



## அடுத்த இதழில்●

★ பாரத ஒருமைப்பாடுக்கு மட்டுமின்றி உலக ஒருமைப் பாட்டுக்கே உதவி வரும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் கிழக்காசிய சுற்றுப் பயணம் பற்றிய சிறப்புக்கட்டுரை.

○

★ கிஸ்ஸிஞ்ஜர் விஜயத்தை யொட்டி அவரது வாக்குச் சாதுர்யம், நகைச்சுவை குறித்த விசேஷக் கட்டுரை.

○

★ கள்ளக் கடத்தலின் மையக் கேந்திரமான பம்பாயிலிருந்து கடத்தல் மன்னர்களின் சாகஸங்கள் குறித்துக் கல்கிக்கு வந்துள்ள பிரத்தியேகக் கட்டுரை.

## மூன்று எளிய வார்த்தைகள்

எனக்குத் தெரிந்த அளவில் பாரத ஒருமைப்பாடு மூன்று எளிய வார்த்தைகளில் அடங்குவதாகப் படுகிறது. இவை மனித வாழ்வின் அடிப்படை அம்சங்களை உணர்த்துவன. இந்திய ஒருமைப்பாட்டின் அடிக்கல்லே இம்மூன்றும்தாம். அவை யாவன:

உணவு — அன்றாட உணவுக்காக மனிதன் உழைக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தும் வார்த்தை.

அழகு — வாழ்க்கையைக் கலாரசனையோடு நடத்துவதிலும் கலைகளை வாழ்வோடு பிணைப்பதிலும் மனிதன் காட்டவேண்டிய அக்கறை.

புரட்சி — இன்று நிலவும் அரசியல், சமூக, பொருளாதாரச் சூழலை மாற்றி அமைக்க மனிதனுக்கு உள்ள உரிமை.

இம்மூன்று வார்த்தைகளும் இந்திய மக்களைப் பொருளாதார ரீதியாகவும், கலாசார ரீதியாகவும், அரசியல் ரீதியாகவும் ஒன்றுபடுத்துவன.

இம்மூன்று வார்த்தைகளும் எல்லாப் பாரத மொழிகளுக்கும் பொதுவானவையும் கூட! அன்ன அல்லது அன்னம்; சௌந்தர்யம் அல்லது சுந்தரம் - இவை எல்லா மொழிகளுக்கும் பொது. மூன்றாவதான புரட்சி அல்லது இன்குலாப் பகத்சிங் காரணமாக நாடெங்கும் எதிரொலித்துப் பொதுச் சொல்லாகி விட்டது!

இந்திய மக்களுக்கு இன்றுள்ள பசி மூன்று வகை. உடல் பசிக்குத் தேவை உணவு. ஆன்மீகப் பசிக்குத் தேவை அழகு, உண்மை, கலாசாரம், இலக்கியம், கலைகள். மூன்றாவது பசியை ஓமார் கய்யாம் புரட்சிக்கான சூழ்ச்சியாக வர்ணிக்கிறார்:

அன்பே யானும் நீயும் இசைந்து
அயலில் எவரும் அறியாமல்
வன்பே உருவாம் விதியினையும்
வளைத்துள்ளாக்கி முயல்வோமேல்
துன்பே தொடரும் இவ்வுலகைத்
துண்டு துண்டாய் உடைத்துப் பின்
இன்பே பெருகி வளர்ந்திடுமோர்
இடமாய்ச் செய்ய இயலாதோ?

(கவிமணி மொழிபெயர்ப்பு)

(ஆங்கிலக்கட்டுரையின் தமிழாக்கம்: குட்டிகிருஷ்ணன்)

## நேற்றுவரை குழந்தைகளுக்குக் கிட்டாதது

# இன்று உங்கள் குழந்தைக்கு—

# புதிய டெண்டெர் கேர்




பேபி பவுடர் மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது

உங்கள் குழந்தைக்கு அன்பும், ஆதரவும்— டெண்டெர் கேர்!

மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது. உங்கள் அன்பும், ஆதரவும்தான் உங்கள் குழந்தைக்குக் கிட்டும் பெரும் பேறு. எதிலுமே மிகச் சிறந்தவற்றைத்தானே உங்கள் குழந்தைக்குத்தருகிறீர்கள்.

இதோ, உங்கள் அன்புக்கு ஒரு புதிய சின்னம்— டெண்டெர் கேர். புதிய பேபி பவுடர் இன்றைய விஞ்ஞான வளர்ச்சி தரும் பரிசு. நேற்று வரை வந்த பஃப்பர் செய்யப்படாத பவுடர்கள் குழந்தையின் மேனியைப் புண்படுத்தக் கூடும். ஆனால் புதிய டெண்டெர் கேர் சரியாக பஃப்பர் செய்யப் பட்டது. குழந்தையின் சருமம் சிவந்து போய் சில நேரங்களில் லேசாக புண்படுவது கூட உண்டல்லவா? இதெல்லாம் நேராமல் உங்கள் குழந்தையை டெண்டெர் கேர் பாதுகாக்கிறது. அதன் நிகரற்ற வியர்வை உறிஞ்சும் சக்தி உங்கள் குழந்தையை எப்போதும் வசதியாக, மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.

பட்டுப் போன்ற டால்க், மிதமான நறுமணம்— எல்லாமே அதில் கவனமாக சேர்க்கப் பட்டுள்ளன. உங்கள் குழந்தைக்காக. அதை 'டெண்டெர் கேர்' என்று அழைப்பதே அதனால்தானே.

CTC.G.I.TM



# இனியொரு பிரிவுமில்லை; இழை நிலைப் பிழையும் இல்லை!

அந்தியில் செம்மை காட்டும்
ஆயினும் நீலம் காட்டும்
சந்தியில் வெண்மை காட்டும்
தடமழை பொழிந்த பின்னர்
சிந்திய வண்ணம் எழில்
வானவிற் சிறப்புக் காட்டும்
இந்தியப் பரந்த வானம்
இத்தனை எழிலும் காட்டும்!

பிரிவினில் உறவு என்றும்
பேதத்தில் ஒருமை என்றும்
கருவினில் ஒன்று என்றும்
காட்சிதான் வேறும் என்றும்
ஒரு பெரும் நாட்டின் கூறே
ஒன்பதின் மேலாம் என்றும்
திருவுலாம் பரத நாட்டை
செப்புவர் உலக மாந்தர்!

சரித்திர காலந் தொட்டு
சமயத்தால் ஒருமை கண்டும்
விரித்ததோர் தத்துவத்தின்
விதையெலாம் ஒன்றே என்றும்
பிரித்திட முடியா தாகப்
பிறந்ததோர் பரத நாட்டை
திரித்தனர்; பிளந்துவைத் தோர்
தீமைக்கே விதைவிதைத் தார்!

இனியொரு பிரிவு மில்லை
இழைநிலைப் பிழையும் இல்லை
தனியொரு நாடே எங்கள்
தாயகம் என்று வாழ்வோம்
இனமொரு இனமே என்றும்
இயல்பொரு இயல்பே என்றும்
மனமொரு மனமே என்றும்
வாழ்க்கையைத் தொடருவோமே!

— கண்ணதாசன்



•மலையாளக் கதை•

# மயக்கம்

டாட்டாபுரம் சுகுமாரன்

அலிஸ் ஞாபகப்படுத்திக் கொள்ள முயன்றுள்: 'நான் எப்படி இங்கே வந்தேன்?' நினைவுகளின் கயிற்றில் அவள் ஒரு மிதவை போன்று நகர்ந்து கொண்டிருந்தாள். பின் கட்டிலிருந்து அப்பொழுதும் சத்தம் வந்து கொண்டிருந்தது. திருமணத்துக்கு வந்திருந்த சமையல்காரர்களின் பேச்சுக் குரல்கள்.... பெரிய பெரிய பாத்திரங்களில் வெந்துகொண்டிருந்த பற்பல 'பொருள்களின்' வாசனை மூக்கைத் துளைத்தது. காஸ் விளக்கின் வெளிச்சம் கண்களைக் கூச வைத்தது.

நாளைய தினம் தங்கையின் திருமணம் நடைபெறவிருக்கிறது. அவளுக்குப் பிறகு பிறந்தவள்! அவளுக்கு எதிரில் தவழ்ந்து, தத்தித் தத்தி நடந்து பெரியவளானவள். அலிஸை விட ஸாரா ஏழு வயது இளையவள். நாளைய தினம் அவள் மணமகள் !

அவள் ஸாராவைவிட ஏழு வயது பெரியவளாக இருந்தும் என்ன பிரயோஜனம் ? அவளை யாரும் மணம் புரிந்துகொள்ள முன்வரமாட்டார்கள். அந்த எண்ணம் மனத்தில் உதித்த போது அலிஸ் திடுக்கிட்டாள். அவளைப் பார்ப்பவர்கள் அனைவரும் கூறுவதுண்டு :

"தங்கையைவிட அக்கா பார்ப்பதற்கு லட்சணமாக மூக்கும் விழியுமாக இருக்கிறுள் !"

"அலிஸ் முகத்தில்தான் என்ன களை!"

"இந்த அக்காவின் தங்கையா அந்த ஸாரா? அவள் மட்டும் ஏன் அழகில்லாமல் போய்விட்டாள் ?"

அழகில்லாத தங்கையைத் திருமணம் செய்து கொள்ள ஒருவன் முன்வந்தான். ஆனால் அழகியான அவள் மட்டும் யாருக்கும் வேண்டாம். என்ன முரண்பாடு ! அது மட்டுமா ?

தங்கைக்கு வேலை இல்லை. எஸ்.எஸ்.எல்.ஸி. தேர்வு இரண்டு தடவைகள் எழுதி விட்டு அவள் வீட்டோடு இருக்கிறுள்.

"பெண் வேலைக்குப் போகிறுளா ?" என்று ஸாராவைப் பெண் பார்க்க வந்தவர்கள் கேட்டார்கள். வேலை இல்லை என்று தெரிய வந்ததும் முதலில் வந்த பல வரன்களும் நழுவி விட்டன.

ஆனால் அலிஸுக்கு வேலை இருந்தது. இருபதாவது வயதில் அவள் பி. ஏ. பாஸானுள். அரசாங்க அலுவலகம் ஒன்றில் வேலையும் கிடைத்தது. எட்டு ஆண்டுகளாக அவள் வேலைக்குப் போகிறுள். பி. ஏ. படித்திருந்தும், அரசாங்க வேலை இருந்தும் அலிஸைத் திருமணம் செய்து கொள்ள எவருமே முன்வரவில்லை.

'தன்னை எவரும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்' என்ற எண்ணம் எழவே, அலிஸின் விழிகளில் நீர் நிரம்பியது... பின் கட்டிலிருந்து சமையல்காரர்களின் பேச்சுக் குரல் மறுபடியும் ஒலித்தது. வெகுநாட்களுக்கு முன்னுல் எங்கோ நடந்த ஒரு விருந்தின் வரிசைகளை வருணித்துக் கொண்டிருந்தார், சமையல்கார மாத்யு அண்ணன். கேட்பதற்கு யாராவது கிடைத்தால் போதும், அவர் வாய் ஓயாது. வெற்றிலை பாக்குப் பொட்டலத்தைத்திறந்து வைத்தபடி எவ்வளவு நேரம் வேண்டுமானுலும் பேசிக் கொண்டே யிருப்பார். அலிஸ் காது கொடுத்துக் கேட்டாள். கோட்டயத்தில் எங்கோ எப்போதோ நடந்த ஒரு திருமண விருந்தைப் பற்றித்தான் பேச்சு. இதனை எத்தனை முறைகள் அவள் கேட்டிருப்பாள் ? கேட்டுக் கேட்டுக் காது புளித்துப் போய்விட்டது. ஒருவரிடம் சொன்ன விஷயத்தை அவரிடமே திரும்பத் திரும்பச் சலிக்காமல் பன்முறை சொல்வார், மாத்யு அண்ணன். அதுதான் அவரிடம் உள்ள பெருங்குறை.

கவையற்ற அந்தக் கதையைக் கேட்க அவள் விரும்பவில்லை. பந்தலில் குழந்தைகள் ஓடியாடி விளையாடிக் கொண்டிருந்தார்கள். நான்கைந்து வருடங்களுக்குப் பிறகு தங்கை

யின் குழந்தைகளும் இப்படி ஓடியாடி விளையாட மாட்டார்களா? ஆனால் அவளுக்கு மட்டும்தான் அந்த அதிர்ஷ்டமில்லை. திருமண யோகம் இல்லாதவள் எதற்காகக் குழந்தைகளைப் பற்றி எண்ணவேண்டும்?

சமையல்கட்டிலிருந்துபெண்களின் சிரிப்பொலி எழுந்தது. மேரிப் பாட்டியின் சிரிப்பொலியை வேறாக அவளால் பகுத்தறிய முடியும். கிலு கிலுப்பையின் சத்தம் போன்ற தொரு நகைப்பு! மேரி பாட்டி ஏன் சிரிக்கக் கூடாது? வாழ்க்கையைப் பற்றின எந்தக் கவலையும் அவளுக்கு இல்லை. பேரன் பேத்திகள் எடுத்தாயிற்று. இருப்பினும் அந்தச் சிரிப்பொலியைக் கேட்டாலே அவளுக்கு ஓர் அருவருப்பு! பாட்டியின் பேச்சிலும் நடத்தையிலும் ஏதோ இந்த உலகையே வென்று வெற்றி வாகை சூடியது போன்ற பாவனை!

'....வாழ்க்கையில் பெருமைப்பட்டுக் கொள்ளும்படி அப்படி ஏதாவது என்னிடம் உண்டா?' என்று அலிஸ் எண்ணிப் பார்த்தாள். அவள் காத்திருந்த இன்ப வாழ்வு அவள் தங்கைக்குக் கிடைக்கப் போகிறது!

''அக்காவுக்குக் கல்யாணம் பண்ணாமல் தங்கைக்குக் கல்யாணமா?'' என்று திருமணம் நிச்சயமானபோது யாரோ கேட்க, அம்மா சிரித்துக் கொண்டே சொன்ன பதில் அவள் காதில் ஒலித்துக் கொண்டிருந்தது.

''அவள் ஒரு நிரந்தர நோயாளி. என்ன செய்கிறது?''

'நோயாளியா? அவளுக்கு என்ன நோய்? பார்ப்பதற்கு ஆரோக்கியமாகத்தானே இருக்கிறாள்! என்ன சாப்பிட்டாலும் ஜெரிக்கிறது. எல்லோரையும் போல் அவளால் நடக்க முடிகிறது. அவளுக்கா நோய்? அப்படிச் சொல்கிறவர்களுக்குத்தான் நோய்!' — எண்ணினாள் அலிஸ் மனத்துள்.

இருப்பினும் அவள் ஒரு நோயாளி என்று எல்லோருமே சொல்கிறார்கள். ஆனால், அவளுக்கு அதைப் பற்றி எதுவும் தெரியாது. அலுவலகத்தில்... பாதையில்... வீட்டில்.... எப்போதாவது சில போது அந்த வியாதி வருவது உண்டு என்றும் கூறுகிறார்கள்.... அவளைப் பொறுத்தமட்டில் எல்லாமே ஒரு கனவுதான். நினைவு திரும்பும்போது அவளைச் சுற்றிலும் ஆட்கள் நிற்பது அவளுக்குத் தெரியும். அவளது நோயின் இலட்சணம் அவர்கள் சொல்லித்தான் அவளுக்குத் தெரிய வந்தது.

''அலிஸ்! நாங்கள் ரொம்பப் பயந்து போனோம்! உன் கை நடுங்கியது. பிறகு உடல் முழுவதுமே நடுநடுங்கியது. தடால் என்று நீ கீழே விழுந்தாய். வாயிலிருந்து நுரை நுரையாக வந்தது. மூச்சு நின்று விட்டது போல் கண்கள் பிதுங்கின.....''

டாட்டாபுரம் கருமாரன்



இப்போதெல்லாம் அவர்கள் யாரும் அப்படிச் சொல்வதில்லை. அலிஸின் கை நடுங்க வேண்டியதுதான் தாமதம், அவளைத் தாங்கியெடுப்பதற்குக் கிளார்க்குகளுக்கிடையே பலத்த போட்டி. வெண்ணெய் போன்ற மென்மையான அவளுடைய கைகளைத் தொடுவதற்குக் கிடைக்கும் அந்த வாய்ப்பினை...

ஆக, அலிஸ் சக ஊழியர்களிடமிருந்து ஒரு செல்லப் பெயரைப் பெற்றாள்: 'மயக்க மோகினி'. இப்படித்தான் அவள் தனக்கு வலிப்பு வியாதி என்பதைத் தெரிந்து கொண்டாள். இது என்ன வியாதியோ? நோயாளிக்கு நோயைப் பற்றி எதுவும் தெரியாது. ஆனால் அதைப் பார்த்து நிற்பவர்கள் சகிக்க முடியாமல் தவியாய்த் தவிப்பார்கள்....

இந்த வியாதிக்குப் பயந்துதான் அவளைத்திருமணம் செய்துகொள்ள வந்தவர்கள் எல்லாம் திரும்பிப் போனார்கள்.... ஏனெனில், அவளுக்கு மயக்கம் வருவது ஊரில் அனைவருக்கும் தெரிந்திருந்தது. எத்தனையோ பெண்கள் தாங்கள் உடுத்தியிருக்கும் ஆடைகளுக்குள்ளேயும் உடலுக்குள்ளேயும்வியாதியைச் சுமக்கின்றனர். அவர்களுக்கெல்லாம் கணவர்கள் வாய்க்கிறார்கள். ஆனால், இருபத்தெட்டு வயதாகியும் அலிஸ் ஒரு கன்னிப் பெண்.

## ஒருமைப்பாடு தீவு!

அமெரிக்காவைச் சேர்ந்த தீவு ஹவாய். அந்த மாநில கவர்னர் ஐரிஷ்காரர். மேயர் ஹவாய் இனத்தவர். பிரதம நீதிபதி ஹவாய்க்காரர். சட்டமன்றத் தலைவர் போர்ச்சுகேசியர். முன்னணிக்கு வந்து கொண்டிருக்கும் அரசியல்வாதிகள் ஜப்பான் இனத்தவர். தொழில் இலாகாத் தலைவர் பிலிப்பைன்ஸ்காரர். ஹவாயிலுள்ள பெரும்பாலான மாணவர்கள் இந்தியர்கள். பல இனங்கள் இணக்கமாக வாழ முடியும் என்பதை ஹவாய் எடுத்துக் காட்டுகிறது. மேலை நாட்டு மக்களின் சொர்க்கமாகக் கருதப்படும் ஹவாயில் காண முடியாதவை: பாம்புகள் - பிரிவினைப் பாம்புகள் உள்படத்தான்!

— மணவை ப. சிதம்பரம் (ஆதாரம்: யூத் டைம்ஸ்)



இதயத்தின் சுமைகளைக் கீழே இறக்கி வைப்பதற்காக அவள் சிலுவையில் அறைந்த உருவத்துக்கு முன்னால் பல மணி நேரம் மண்டியிட்டு நின்றதுண்டு. அப்போது அவள் நினைவுக்கு வருவது அந்த நிகழ்ச்சிதான். பன்னிரண்டு ஆண்டுகள் இரத்த அழிவு வியாதியால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த பெண்ணொருத்தி, 'நான் அவர் வஸ்திரத்தை யாகிலும் தொட்டால் சொஸ்தமாவேன்' என்று தனக்குள் எண்ணிக் கொண்டு, அவர் பின் வந்து அவர் வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டாள். இயேசு திரும்பி அவளைப் பார்த்து: ''மகளே! தைரியமாயிரு. உன் விசுவாசம் உன்னைக் குணமாக்கியது'' என்றார். அந்நேரம் அந்தப் பெண் குணம் அடைந்தாள்.

அதைப் போலவே அவளும் குணமடைய மாட்டாளா? ஊமைக்குப் பேசும் திறனை யும் குருடனுக்கு விழியையும் கொடுத்து அவர் குணப்படுத்தினாரே!....

''அலிஸ்! அலிஸ்!''

யாரோ அவளைக் கூப்பிடுவது காதில் விழுந்தது

''அலிஸ்!''

''அலிஸ்!''

இப்போது ஒருவரல்ல, பலர் கூப்பிடுவது அவள் காதில் விழுந்தது

''இதோ, நான் இங்கே இருக்கிறேன்!''

''நீ அங்கே என்ன செய்கிறே?''

''மாட்டுக்குத் தண்ணி காட்டறேன்''

தோட்டத்துக்கருகில் உட்கார்ந்துகொண்டு ஏதேதோ எண்ண ஆரம்பித்து எவ்வளவு நேரமாயிற்று! இதனிடையே மாட்டுக்குத் தண்ணி காட்டவே மறந்து போனாள். கழுத்தையும் தலையையும் ஆட்டியவாறு மாடுகள் அவளையே பார்த்துக் கொண்டிருந்தன. அவள் தண்ணீர்த் தொட்டியைத் தள்ளி வைத்தாள்.....

'இந்தத் திருமண வீட்டில் அவள் யாரோ ஒருத்தி! யாருக்கும் வேண்டாதவள்' என்று அலிஸுக்குத் தோன்றியது. இருப்பினும், அவர்கள் அவளைத் தேடுகிறார்கள். ஆனால் யாரும் அவளுக்கு இன்பத்தின் சாளரங்களைத் திறந்து விடவில்லை. அவர்கள் காட்டும் நேசம் உதட்டளவே.

குளிர்ந்த காற்று வீசியது. மழை வரப் போகிறதா? ஐப்பசியில் இதைப் போல் எப்போதும் அடை மழை பெய்ததில்லை. தோட்டத்துக் குளம் நிரம்பியுள்ளது. எங்கும் தண்ணீர். குளத்தின் படிக்கட்டுக்கள் நீரில் மூழ்கிக் கிடக்கின்றன. தரையையும் நீரையும் பிரித்தறிவது கடினம். பாசி படிந்த நீரும் புல் மூடிய தரையும்!

'சர்க்கரைப் பந்தலில் தேன் மழை பொழிந்தபடி'.... பந்தலிலிருந்து இசை ஒலித்தது. யாரோ கிராமபோன் கொண்டு வந்திருக்கிறார்போல் இருக்கிறது. சிறுவர்களும் சிறுமியரும் அதைச் சுற்றி வட்டமிட்டு நிற்பதை அவள் கண்டாள்.

அலிஸ் இசையை வெறுத்தாள். அவள் தோட்டத்தினூடே நடந்தாள். சங்கீதத்தின் சில வண்டுகள் அவளைப் பின்தொடர்ந்தன. இந்த மகிழ்ச்சி ஆரவார உலகிலிருந்து ஓடிப் போய்விட வேண்டும் போல் இருந்தது. அவளுக்கு மூச்சுத் திணறியது.

பளிச்சென்று மின்னல் மின்னவே அவள் வானத்தில் ஒளிக்கோடொன்றைக் கண்டாள். அப்போது அவளுக்கு மணமகளின் வெண்மையான ஆடை நினைவுக்கு வந்தது. 'நாளைய தினம் தூய வெள்ளை ஆடைகளை அணிந்து லாரா மாதா கோயிலுக்குப் போவாள். மெல்லிய மஸ்லின் ஜிப்பாவும் எட்டு முழ ஜரிகை வேஷ்டியும் உடுத்திய தாமஸ் லாராவின் கழுத்தில் தாலி கட்டுவார். 'தங்காய்! நீ வாழ்க!' ஆனால் என்ன காரணமோ அவள் அந்தக் காட்சியைப் பார்க்க விரும்பவில்லை. தங்கையை அவள் உளமார நேசிக்கிறாள் என்பது உண்மைதான்.... இருந்தும்...

திருமண வீடு ஒரு தேன் கூடாக மாறி இருந்தது. அந்தக் கூட்டில் அவள் இருப்பாளே யானால் அவளுக்கு மூச்சுத் திணறும் என்பது திண்ணம். விடுதலை எங்கே? இசை ஒலிப்பது நின்றபோது அவள் திரும்பவும் தொழுவத்

# அன்பின் நினைவு அலைகள் —லக்ஷ்மியுடன்

ஒரு மகிழ்ச்சி நிறை மாலைப் பொழுதில் நாம் இருவர் மட்டும் ... அன்பின் அரவணைப்பில். அது உன்மீது கொண்ட அன்பு, லக்ஷ்மி.

அன்புக்குரிய லக்ஷ்மி, மனங்கவர் லக்ஷ்மி, மகிழ்ச்சி நிறை லக்ஷ்மி — இப்படி நீ எனக்குப் பலவாய் விளங்குகிறாய்.

லக்ஷ்மி, நீ பருத்தியின் குளுமை, பாப்ளினின் மென்மை, பாலியஸ்டர் கலவைகளின் நாகரீகக் கவர்ச்சி ... லக்ஷ்மி, கிளர்ச்சியூட்டும் நிறங்கள், அடக்கமான வண்ணங்கள், தன்னிச்சையான கோடுகள், கட்டங்கள், இழைச் சேர்க்கைகள் இவற்றின் துணை கொண்டு என்னை நீ பிரமிக்கச் செய்கிறாய்.

லக்ஷ்மி — இன்றுபோல் என்றும் இணைபிரியாமல் இருந்திடுவோம்.

டெடோரன்® காட்டன் பாப்ளின் ஷர்ட்டிங் மடிப்புக்கலையா 'கிரீஸ்லெஸ்' சிறப்பு.

டெரிகோசாட்: 100% காட்டன் பாப்ளின் ஷர்ட்டிங்.

ஸம்மர் ஸ்டார்: சாத்து புது வண்ணம் விசேஷ இழை வோட்டம். 100% காட்டன் பாப்ளின்.

கோல்ட் கிரௌன்:® 67% பாலியஸ்டர்/33% காட்டன் இணைந்த ஷர்ட்டிங்.

புவராஜ்: 80% பாலியஸ்டர்/20% காட்டன் இணைந்த ஷர்ட்டிங்.

டெரி கிரௌன்: 67% பாலியஸ்டர்/33% காட்டன் இணைந்த ஸூட்டிங்.

Lovable Lakshmi

® ரிஜிஸ்டர்ட் டிரேட்மார்க்

லக்ஷ்மி மில்ஸ் கம்பெனி லிமிடெட் கோயமுத்தூர் 641018

SAA LM 1076 R

# ஒருமைப்பாடா? ஒற்றுமைக் குலைவா?

"உறவுக்குக் கைகொடுப்போம் உரிமைக்குக் குரல் கொடுப்போம்!"

சிவசேனை தலைவர் பால் தாக்கரே.

மாநில சுயாட்சி பற்றி விளக்க நூல் எழுதியுள்ள மாறன்.

1953க்கு முற்பட்ட நிலைக்குக் காஷ்மீரம் திரும்ப வேண்டும் என்று பிடிவாதம் செய்யும் ஷேக் அப்துல்லா.

தமிழர் படைத் தலைவர் மதுரை முத்து.

கன்னடியர்களின் நலனைக் காப்பதாகக் கூறிக் கொண்டு புறப்பட்டிருக்கும் திரு வட்டாள் நாகராஜ்.

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

இன் வராந்தாவின் மீது ஏறி நின்றான். பிறகு அங்கே இருந்த சிமிட்டித் தொட்டியின் மீது வெகுநேரம் உட்கார்ந்திருந்தான். அங்கிருந்து பார்த்தால் நிரம்பி வழியும் குளத்தைக் காண முடியும். பாசி படிந்த நீரும் புல் மூடின தரையும். நிலவொளியில்லாத இரவுகளில் அந்தக் குளம் ஒரு பிசாசின் வாயைப் போல.....

அனீஸின் கண்கள் பிரகாசித்தன. 'அந்தக் குளத்தில் நாலு ஆட்கள் உயரத்துக்காவது நீர் இருக்கும். அதன் அரவணைப்பில் அழிவில்லாத நிம்மதி கிடைக்கும். நாளைய தினம் தங்கையின் திருமணத்தைப் பார்க்கவேண்டியிராது. எல்லாத் துயரங்களும் அந்த நீர்ப் பரப்பில் கரைந்து போகும்!

அனீஸ் பெருமூச்சுவிட்டான். திருமண வீட்டு ஆரவாரம் அப்போதும் ஓயவில்லை. அவன் கடைசி முறையாகப் பிரியாவிடை பெறுவதைப்போல் அந்தத் திசையை நோக்கினான்.

பிறகு, நிரம்பி வழிகின்ற அந்த நீர்ப் பரப்பை நோக்கி, ஒரு முடிவுக்கு வந்தவன் போல் அவன் உறுதியுடன் நடந்தான்.

திடீரென்று.... அவன் கை நடுங்கியது. உடல் முழுதும் நடுங்கியது. வெட்டுண்டு சாய்ந்த மரம் போல் அனீஸ் தரையின் மீது தடாலென்று விழுந்தான். வாயிலிருந்து எச்சிலும் நுரையும் வெளிவந்தன.... மூச்சே நின்றது போல்... கண்கள் பிதுங்கின....

அக்காவைத் தேடித் தொழுவத்துக்கு வந்த ஸாரா கூச்சலிடவே எல்லோரும் ஓடி அணைந்தார்கள். யாரோ அனீஸைத் தூக்கி எடுத்துப் போய்க் கட்டிலில் படுக்க வைத்தார்.

கண்கள் திறந்தபோது துயரம் தோய்ந்த முகத்துடன் தங்கை நின்று கொண்டிருப்பதை அனீஸ் கண்டான். அவனுக்கு எல்லாம் தெள்ளத் தெளிவாக விளங்கியது. அவன் உயிருடன் இருக்கிறான்; தங்கையின் திருமணத்தைக் காண்பதற்கு. தன்னைக் காப்பாற்றிய நோயிடம் அவனுக்கு அளவுகடந்த பாசம் தோன்றியது.

வெளியே பலத்த காற்று வீசியது. ஆனால் அனீஸின் உள்ளத்தில் வீசிய புயல் ஓய்ந்திருந்தது.

தமிழாக்கம்: கே. நாராயண

# DEEDS....

## not merely words...

# PERFORMANCE....

## not only promises...

For so long, since two decades, we have been giving you all the Cement you wanted...

Our three kilns were working day and night, to meet your requirements...One of our giant kilns, for example, had, not long ago, set an all time record, perhaps a world record, for working non-stop for over 387 days, with perhaps a few hours stoppage, due to power failure...to give you more and more cement...

But things are not the same today...There is coal shortage, and there are power failures...And so, our performance has not been the same...for reasons beyond our control...

But, we assure you that once again, when conditions are normal, our DEEDS and PERFORMANCE will be up to your expectations...
Because we believe in DEEDS...
not merely words...
and in PERFORMANCE...
not only promises...

**Dalmia Cement (Bharat) Ltd.**
Dalmiapuram (Tamil Nadu)
**Manufacturers of famous ROCKFORT BRAND Quality Cement**



# பொன்னியின் புதல்வர்

சுந்தா




□ "இந்த முன்வாசல் வழியாக எத்தனையோ இளம் பிள்ளைகள் சிறந்த கல்வியும் பண்பாடும் தேசபக்தியும் தெய்வ பக்தியும் அடைந்தவர்களாக வெளியேறுகிறார்கள்........"

□ சரஸ்வதி கூடத்துக்கு முன்னால் காந்தி வேப்ப மரம்.



## 12. சிறந்த மாணாக்கன்

பள்ளிக்கு உள்ளே : இச்சைப் பாடம்
கட்டாயப் பாடம், சிறப்புப் பாடம்
பள்ளிக்கு வெளியே ; வாழ்க்கைப் பாடம் !

அந்த ஆண்டு கோடை விடுமுறைக்குக் கிராமத்துக்குப் போவதற்கு முன்னால், கிருஷ்ணமூர்த்தி, தேசியப்பள்ளியின் காம்பவுண்டுக்குள் போய், பின்னால் காந்தி வேப்ப மரம் என்று பெயர் பெறப் போகும் மரத்தின் அடியில் உட்கார்ந்து யோசனையில் ஆழ்ந்தான். திருச்சிக்கு வந்தபோதே, அந்தப் பள்ளிக் கூடத்தில் சேர வேண்டும் என்றுதான் ஆசைப்பட்டான். ஆனால், அதன் கண்டிப்பான விதிகள், காலந் தாழ்ந்து சேருவதற்கு இடம் கொடுக்கவில்லை. அதனால் தான் ஹிந்து செகண்டரி ஸ்கூலில் சேரும்படி நேர்ந்தது. அதனால் என்ன? அடுத்த ஆண்டில் தேசியப் பள்ளியில் சேர்ந்தால் போச்சு. தான் எழுதிய பரீட்சையில் நிச்சயம் நிறைய மார்க்குகள் கிடைக்கும். குடும்பத்துக்குப் பாரமின்றி, சம்பளம் இல்லாமலே படிக்கலாம். அங்குள்ள தர்ம மாணவர் விடுதியில் சேர்த்துக் கொள்வார்களேயானால், சித்திக்கும் பாரமின்றி இருக்கலாம்.

அவன் நினைத்தபடியே நடந்தது. இடையாத்துமங்கலம் ரங்கசாமி அய்யரின் சிபாரிசுடன் அவன் அனுப்பிய விண்ணப்பத்தையும், அவன் வாங்கியிருந்த உயரிய மார்க்குகளையும், தேசியப் பள்ளி அதிகாரிகள் பரிவுடன் கவனித்து, அவனுக்கு முழுச் சம்பளச் சலுகை அளித்தார்கள். கணியூர் கிருஷ்ணய்யரின் இலவச விடுதியிலும் சேர்த்துக் கொண்டார்கள். சாதாரணமாக

□ வேத வேதாந்தக் கூடம்.



□ சாரநாதன்



□ ராமய்யர்







வேங்கடரமண சர்மா





சுந்தரேச சாஸ்திரியார்.

சேஷ ஐயங்கார்.

பி. ஜி. பாலகிருஷ்ணன்.



இரண்டுவிதச் சலுகைகளையும் ஒரே மாணவனுக்குக் காட்டுவதில்லை.

திருச்சி தேசியப் பள்ளியின் வைர விழாவை முன்னிட்டு, கல்கி பத்திரிகையின் 1946 ஆகஸ்டு 18ஆம் தேதிய இதழின் அட்டையிலும் உள்ளேயும், அதன் வெவ்வேறு தோற்றப் படங்கள் வெளியாயின. அவற்றில், அந்தக் கல்லூரியின் முகப்பைக் காட்டும் படம் ஒன்றுக்கு, கல்கி ஆசிரியர் ஒரு சிறு குறிப்பு எழுதியிருந்தார் :

திருச்சி தேசியக் கல்லூரியின் இந்த முன் வாசல் வழியாக எத்தனையோ இளம் பிள்ளைகள் சிறந்த கல்வியும் பண்பாடும், தெய்வ பக்தியும் தேசபக்தியும் அடைந்தவர்களாக வெளியேறித் தேசத்தின் நாலு திசைகளுக்கும் சென்று வாழ்கிறார்கள்.

அத்தகைய இளம் பிள்ளைகளில் நமது வரலாற்றுநாயகரும் ஒருவர்.

ஆனால் மற்ற இளம் பிள்ளைகளுக்கும் இவருக்கும் ஒரு வேற்றுமை. மற்றவர்கள் ஒரு பட்டத்துடனோ, அல்லது குறைந்தபட்சம் எஸ். எஸ். எல். ஸி. சான்றிதழுடனோ, அந்த வாசல் வழியே வெளியே வந்தவர்கள். கல்கியோ, ஆறாம் படிவ இறுதித் தேர்வுக்கு மூன்று மாதங்களுக்கு முன்னாலேயே, 1921 ஜனவரி மாதக் கடைசியில், மகாத்மா காந்தியின் ஒத்துழையாமை அறைகூவலுக்கு இணங்க வெளியேறினார். அந்த வெளியேற்றம் அவருடைய வாழ்க்கையில் பெரிய மாறுதலைத் தோற்றுவித்த முக்கியமானதொரு திருப்பமாய் இருந்தது.

அந்த வெளியேற்றத்துக்குக் கால்நூற்றாண்டுக்குப் பிறகு, அதைப் பற்றியும், பொதுவாகத் தமது பள்ளி நாட்களைப் பற்றியும், அந்தப் பள்ளியின் வைர

கனியூர் கிருஷ்ணய்யர்.



ராமானுஜாச்சாரியார்.



பாடப் பயிற்சிக்காகக் கிருஷ்ணமூர்த்தி எழுதிய கட்டுரை.

R.Krishnamurthi
Form. III. c

The Wrestling match.

One day when Celia was trying to cheer up her cousin Rosalind as usual, a messenger came from the duke and asked them if they would like to witness a wrestling match that was just going to be held in the court before the palace. Celia consented to go thinking that it would make Rosalind to throw off her melancholy at least for a time.

"When the ladies went to the court they came to know that an inexperienced young man was going to wrestle with a famous wrestler. The duke asked them to see whether they

விழா மலரில், கல்கி ஒரு கட்டுரை எழுதினார் :

திருச்சி நேஷனல் ஹைஸ்கூலில் நான் மூன்று வருஷங்கள் படித்தேன். அந்த நாட்களை நினைத்தால் எனக்கு இணையற்ற மகிழ்ச்சி உண்டாகிறது. நான் படித்த வகுப்புக்களின் ஆசிரியர்கள் எல்லோரும் என்னிடம் எவ்வளவோ அன்பாக இருந்தார்கள். என்னுடன் படித்த மாணாக்கர்களும் அப்படித்தான். அவர்கள் எல்லோரும் இப்போது எங்கெங்கோ, என்னென்ன தொழில்களிலோ ஈடுபட்டிருப்பார்கள். ஆயினும் சில சமயம் அவர்களை நான் நினைத்துக் கொள்வது போலவே அவர்களும் என்னை நினைத்துக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

ஹெட்மாஸ்டர் ஸ்ரீ ஜி. சேஷய்யங்கார் தினந்தோறும் பள்ளிக்கூடத்தின் நீண்ட தாழ்வாரத்தில் விடுவிடுவென்று நடந்து போகும் காட்சி என் மனக் கண் முன் நிற்கிறது. நேஷனல் கல்லூரியின் வளர்ச்சிக்காக அவர் செய்த தியாகங்கள் பற்றியும் முயற்சிகள் பற்றியும் அப்போது நான் அதிகமாய் அறிந்திருக்கவில்லை. ஆயினும் அவரைப் பார்க்கும் போதெல்லாம் ''இவர் ஒரு மகான்'' என்ற எண்ணமும் பயபக்தியும் என் மனத்தில் உதிக்கும்.

எந்தக் காரணத்துக்காகவோ ''ஸர் பஸ்'' என்று மாணவர்களால் அழைக்கப்பட்ட ஸ்ரீ டி. எஸ். சுப்பிரமணிய அய்யர், தூய வெள்ளைச் சட்டை அணிந்து கொண்டு வகுப்புக்குள் வந்ததும் கைக்குட்டையை எடுத்து மேஜையைத் தட்டுகிற காட்சியை நான் இன்னமும் மறக்கவில்லை.

1921ஆம் வருஷம் ஜனவரி மாதம், மகாத்மாவின் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து நான் பள்ளிக்கூடத்தை விட்டபோது ஒவ்வொரு ஆசிரியரும் தனித் தனியே என்னைக் கூப்பிட்டு அன்புடன் உபதேசித்ததை என்னால் மறக்க முடியாது.

பொதுவாக நேஷனல் காலேஜை நினைக்கும் போதெல்லாம் எனக்கு ஒருவித ஆனந்தம் உண்டாகிறது.

முன்சொன்ன கல்கி இதழின் அட்டைப் படம், மலைக் கோட்டையைப் பின்னணியாய்க் கொண்டு தேசியக் கல்லூரியின் ஒரு தோற்றத்தைக் காட்டிற்று. அந்தப் படத்துக்குக் கல்கி ஆசிரியரின் குறிப்பு :

அதோ பின்னணியில் தெரிகின்றதே, அந்தக் கட்டிடத்தைத் தமிழ்நாட்டில் பிறந்த யாரும் சுலபமாக இனம் கண்டுபிடித்து விடுவார்கள். சரித்திரத்திலும் புராணத்திலும் புகழ்பெற்ற திருச்சிராப்பள்ளி மலைக் கோயில் அதுதான்! முன்னணியில் இருக்கும் கட்டிடமோ மேற்படி மலைக்கோயிலைப் போலவே புகழுக்கும் பூஜைக்கும் உரியதான கலைக் கோயில்: திருச்சி நேஷனல் காலேஜ் என்று பெயர் பெற்றது. அறுபது வருஷங்களுக்கு முன்னால் மூன்று பரோபகார சீலர்களின் உள்ளத்திலே இந்தக் கலைக் கோயில் தோன்றிற்று.

கல்கி குறிப்பிட்ட அந்தப் பரோபகார சீலர்கள்: ஜி. சேஷ அய்யங்கார், பி. எஸ். வேங்கடரமண சர்மா, பி. ஜி. சுந்தரேச சாஸ்திரியார்.

அவர்கள் மூவரும், கிறிஸ்துவப் பாதிரியார்கள் நடத்திய எஸ். பி. ஜி. கல்லூரிப் பள்ளிக்கூடத்தில் ஆசிரியர்களாய் இருந்தார்கள். பாதிரிமார்கள் தீவிரமாய் மத போதனை நடத்தி மாணாக்கர்கள் பலரை மதம் மாற்றிக் கொண்டிருந்ததைப் பற்றி, அந்த இளம் ஆசிரியர்கள் அடிக்கடி கவலையுடன் பேசிக் கொண்டார்கள். ஒரு நாள் மாலை காவிரி ஆற்றின் மணலில் அமர்ந்தபடி அவர்கள் ஒரு திட்டம் போட்டார்கள். மூவரும் சேர்ந்து தனிப் பள்ளிக்கூடம் ஒன்றை அமைப்பது என்பதுதான் அந்தத் திட்டம். ஒரே நாளில் அவர்கள் கிறிஸ்துவப் பள்ளியிலிருந்து விலகி, தமது திட்டத்தை நிறைவேற்றுவதில் முனைந்தார்கள். பலருடைய உதவியை நாடிப் பெற்று, 1886 ஜூன் மாதத்தில், ''நேஷனல் ஹைஸ்கூல்'' என்ற வித்தியாலயத்தை நிறுவினார்கள்.

காலத்துக்கு ஏற்றபடி ஆங்கிலக் கல்வி புகட்ட வேண்டியதுதான். ஆயினும் ஆங்கிலக் கல்வியைக் கற்கும் மாணவர்கள் வேற்று மதத்துக்கும் பழக்க வழக்கங்களுக்கும் அடிமை ஆகாதபடி பாதுகாக்க வேண்டும்; ஹிந்து நெறிகளையும் தேசியப் பான்மையும் மாணவர்களுக்கு ஊட்டி, உண்மையான பாரத மாந்தராய் அவர்கள் வளர்ந்து, தாய்நாட்டுக்குப் பணியாற்றும்படி செய்ய வேண்டும் — இவைகளே அந்தக் கலாசாலையின் நோக்கம். அந்தக் கல்விக் கூடத்தை அமைக்கையிலும், அமைத்த புதிதிலும், நிறுவனர்கள் மூவரும் எத்தனையோ இடையூறுகளைக் கடக்க வேண்டியதாயும், இன்னல்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டியதாயும் இருந்தது. தியாக உணர்ச்சியுடன் அவர்கள் உழைத்த உழைப்பினால் அவர்களுடைய பள்ளி மேலும் மேலும் வளர்ந்தோங்கி, 1919ல் கல்லூரியாக விரிவடைந்தது. சோழ நாட்டு நிலக்கிழார்களும் நாட்டுக்கோட்டை தனவந்தர்களும் அதற்கு நிறைய நன்கொடை அளித்தார்கள்.

நன்கொடைகள் திரட்டுவதில் சேஷ அய்யங்கார் நிபுணராய் இருந்தார். அவ

ருடைய முயற்சியினால்தான் தேசியக் கல்லூரியின் கட்டடம் எழுந்தது. ''தட்டினால் வெண்கலம்போல் சத்தம் கேட்கும்'' என்று பலரும் பாராட்டும்படி அவ்வளவு உறுதியான கட்டடத்தைக் கட்டியவர், கடைசிவரை, ஒரு கூரை வீட்டிலேயே குடியிருந்தார்.

கட்டடம் எழுந்ததோடு சேஷய்யங்கார் அவர்களின் திட்டம் முடிந்துவிடவில்லை. சிருங்கேரி மடாதிபதியை அணுகினார். மடத்தின் செலவில் ஹைஸ்கூல் மாணவர்களுக்கு இந்து மத தத்துவங்களைப் போதிக்க ஒரு பண்டிதரை நியமித்தார். கோயமுத்தூர் ஜில்லாவிலிருந்த வள்ளல், கணியூர் கிருஷ்ணய்யர், ஹெட்மாஸ்டர் சேஷய்யங்காருடைய கைங்கரியத்தில் அபிமானம் கொண்டார். இருபத்தைந்து ஏழை மாணவர்களுக்கு உணவு அளிக்கவும், இங்கிலீஷ் படிப்போடு வேதம் முதலியன ஓரளவு தெரிந்துகொள்ள ஏற்பாடு செய்யவும், நிரந்தரமான நன்கொடையாக, ஐம்பது ஏக்கரா அயன் நன்செய் நிலத்தை அந்தச் சீமான் எழுதி வைத்தார். அவர் ஏற்படுத்திய தருமம் இன்றளவும் விமரிசையாக நடந்து வருகிறது.

இவ்வாறு, ''ஸ்ரீதரம் குருஸ்வாமி'' என்னும் கே. குருஸ்வாமி கல்கி 18—8—1946 இதழில், தேசியப் பள்ளியின் வைர விழா பற்றிய கட்டுரை ஒன்றில் எழுதினார். அவர் அதே பள்ளியில் பயின்று அதிலேயே ஆசிரியராயும், 1956லிருந்து ஐந்தாண்டு காலம். தலைமை ஆசிரியராயும் இருந்தார்.

அதே குருஸ்வாமி அய்யர், ஓய்வு பெற்றபின், தேசியக் கல்லூரியின் பொன் விழா மலரில், தமது பழைய நினைவுகள் பற்றி ஆங்கிலத்தில் ஒரு கட்டுரை எழுதினார். அந்தக் கட்டுரையில் ஒரு பகுதி கல்கியைப் பற்றியது :

கிருஷ்ணமூர்த்தி எனும் பெயர் கொண்ட மாயவரத்து மாணக்கன் ஒருவன், திருச்சி தேசியப் பள்ளிக்கூடத்தின் அருமை பெருமைகளைப் பற்றி எப்போதும் பேசிக் கொண்டே இருந்தான்; அந்தப் பள்ளியில் சேர்ந்து படிக்க வேண்டும் என்று மட்டில்லா ஆசை கொண்டிருந்தான். கடைசியில் 1918ல் அவனுடைய ஆசை நிறைவேறியது. அவனுடைய பேச்சிலே மயங்கி நானும் ஆசை கொண்டு இதே பள்ளியில் அடுத்த ஆண்டில் சேர்ந்தேன்.

படிப்பிலே மற்ற மாணவர்கள் எட்டமுடியாத உயரத்தில் இருந்தான் கிருஷ்ணமூர்த்தி. 1921 ஜனவரியில் ஆங்கிலப் பள்ளிகளை விட்டு வெளியேற வேண்டும் என்ற மகாத்மாவின் குரலைக் கேட்டு, திடீரென்று அவன் படிப்பை நிறுத்திக் கொண்டான். முதல்வர் இராமா



உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம் இவற்றைச் சேர்ந்த ஜனங்களிடையே ஒரு விநோதமான பழக்கம் இருந்து வருகிறது. இவர்களது இல்லங்களில் பெண்ணுக்குத் திருமணமாகிப் புக்ககம் சென்று விட்டால் பெண் வீட்டுக்குச் செல்லும் தாய் தந்தையர் ஒரு வேளை காப்பியோ சாப்பாடோ சாப்பிட்டாலும் அதற்கான பணத்தைக் கொடுத்து விடுவார்கள். லலிதா சுந்தரராமன்

---

நுஜாச்சாரியார் அனுதாபப்பட்டார். ஆயினும் அவர் கிருஷ்ணமூர்த்தியிடம் சொன்னார்: ''நீ முதலாவதாய்த் தேறி மேலும் படித்துச் சிறக்க வேண்டியவன். அப்படியே நீ விலக எண்ணினாலும், இன்னும் இரண்டே மாதங்கள் பொறுத்து, சர்க்கார் பரீட்சையை எழுதிவிட்டுப் போயேன்.''

''நான் துணிந்துள்ள வழிக்கு, எஸ். எஸ். எல். ஸி. பத்திரத்தினால் என்ன பிரயோஜனம் ஸார்?'' என்று கிருஷ்ணமூர்த்தி கேட்டான்....

தாம் படித்த பள்ளியையும் பழைய பிணைப்புக்களையும் கல்கி ஒருபோதும் மறக்கவில்லை. பள்ளியின் வைர விழா நடந்தபோது, கல்லூரி நிதிக்காக முனைந்து பணம் திரட்டிக் கொடுத்தார். அதற்கெனச் சென்னையில், பழைய மாணவர் கமிட்டி ஒன்றை அமைத்தார். தமது பத்திரிகையில் சிறப்புக் கட்டுரைகளும் நிதி விண்ணப்பங்களும் வெளியிட்டார். ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியின் உதவிக் கச்சேரி ஒன்றுக்கு ஏற்பாடு செய்தார்.

'கல்கி' படித்த கல்வி நிலையம் என்ற காரணத்தால், நண்பர் சதாசிவம் அதற்கான நிதி திரட்டலில் அக்கறை கொள்ள, எம்.எஸ்ஸின் இசைக் கச்சேரி நடக்கலாயிற்று. ஏற்கனவே கல்கி, தமது செல்வாக்கினால் ஆயிரக்கணக்கில் பணம் திரட்டிக் கொடுத்திருந்தார். தம் சொந்த நன்கொடையாகவும் ஆயிரம் ரூபாய் அளித்திருந்தார். மொத்தத்தில் விழா நிதியைப் பெருக்குவதில் பேருதவி புரிந்தார். மேற்படி கச்சேரியைப் பற்றியும், தேசியக் கல்லூரியின் வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்ட இரு பேராசிரியர்கள் பற்றியும், ''கல்வி சிறந்த தமிழ்நாடு'' என்ற தலைப்புடன், கல்கி ஒரு கட்டுரை எழுதி வெளியிட்டார்:

மகா கவி பாரதியாரின் மேலே கண்ட அருள்வாக்கு அகத்திய முனிவரின் காலத்திலிருந்து இன்று வரையில் உண்மையாக இருந்து வந்திருக்கிறது. நம் அருமைச் செந்

தமிழ் நாடு தமிழ்க் கல்வியிலே மட்டுந்தான் சிறந்து விளங்கிற்று என்பதில்லை. வடமொழிப் புலமையிலும் இணையில்லாத சிறப்பு வாய்த்திருந்தது. காசி நகர்ப் புலவர்கள் வட நாட்டிலே தங்கள் புலமையைப் பாராட்டுவாரைக் காணமல் காஞ்சி மன்னர்களைத் தேடி வந்த காலமும் உண்டு. காஞ்சி நகர்ப் புலவர்கள் காசி நகர்ப் புலவர்களை விவாதப் போரில் முறியடித்ததும் உண்டு.

அதே மாதிரி இந்தக் காலத்தில் ஆங்கில பாஷையில் ஆங்கிலேயரே பார்த்து அதிசயிக்கும்படியான புலமை வாய்ந்தவர்கள் சிலர் தென்னிந்தியாவில் இருக்கிறார்கள். இத்தகைய தலைசிறந்த புலவர் கோஷ்டியில் ஸ்ரீ சாரநாத அய்யங்கார் அவர்களையும் ஸ்ரீ ஏ. ராமையர் அவர்களையும் சேர்க்க வேண்டும். ஸ்ரீ சாரநாத அய்யங்கார் அவர்கள் ஆங்கிலப் புலமையுடன் தமிழிலேயும் அக்கறை உடையவர். ஸ்ரீ ஏ. ராமையரோ, ஆங்கிலம் தமிழோடு கூட, தேசிய பாஷையான ஹிந்துஸ்தானியிலும் நிபுணர். இப்படித் தமிழ் நாட்டு ஆசிரியர் கோஷ்டியில் எத்தனையோ பேர் இருப்பதை எண்ணும்போதுதான், ''கல்வி சிறந்த தமிழ்நாடு'' என்னும் பாரதியாரின் அருள்வாக்கு எத்தனை பொருள் பொதிந்த வாக்கு என்பதை உணர்கிறோம்.

ஸ்ரீ சாரநாதய்யங்கார், ஸ்ரீ ராமய்யர் போன்றவர்கள் சாதாரணமாய்க் கவர்ன்மெண்ட் கலாசாலைகளில் ஆசிரியர்கள் பெறும் சம்பளத்தில் பாதிக்குக் குறைவாக வாங்கிக் கொண்டும், அதிலும் ஒரு பகுதியைக் கலாசாலைக்குத் திரும்ப அளித்துக் கொண்டும், திருச்சி நேஷனல் காலேஜைப் போற்றி வளர்த்து வந்திருக்கிறார்கள்...

அக்டோபர் 20ந் தேதி நேஷனல் பள்ளி வைர விழா கல்லூரி நிதிக்காகத் திருச்சியில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரி நடைபெற்றது. முன் வரிசையில் அக்ராசனம் வகித்த ஜில்லா கலெக்டர் ஸ்ரீ வர்க்கீஸ் அவர்களுக்குப் பக்கத்தில் பிரின்ஸ்பால் சாரநாத ஐயங்காரும் அமர்ந்து, தமது முகமலர்ச்சியினால் அகத்தின் மகிழ்ச்சியைப் புலப்படுத்திக்கொண்டிருந்தார். ''சங்கீதக் கச்சேரி என்றால், எல்லாம் சங்கீதக் கச்சேரியாகுமா? இதுவல்லவோ கச்சேரி?'' என்று ஒவ்வொரு நிமிஷமும் அவருடைய முக பாவம் தெரியப் படுத்திக் கொண்டிருந்தது. அந்தக் கச்சேரியின் மூலம் தாம் வளர்த்த கலைமகள் ஆலயத்துக்கு 40,000 ரூபாய் சேர்ந்தது என்னும் எண்ணம் அவருக்கு இரட்டிப்பு மகிழ்ச்சியை அளித்ததில் வியப்பு ஒன்றும் இல்லைதானே?

தேசியக் கல்லூரியின் வளைவுக்குள் இப்போது வேத வேதாந்த மண்டபம் உள்ள இடத்துக்குப் பின்னால், கணியூர் கிருஷ்ணய்யர் விடுதி அமைந்திருந்தது. அதில் தங்கும் மாணவர்களுக்குத் தினசரி ஒழுக்க முறைகள் சில உண்டு. அவற்றை எல்லாம் ஒழுங்காக மட்டும் அல்லாமல், கூடுதலாகவே அனுசரித்து நடந்தான் கிருஷ்ணமூர்த்தி. இரவில் வெகுநேரம் படித்துக் கொண்டிருந்துவிட்டு, மற்ற மாணவர்கள் தூங்கிய பிறகுதான் தன் படுக்கையை விரிப்பான். காலையில், பொழுது புலர்வதற்கு முந்தியே, எல்லாருக்கும் முன்னதாக எழுந்து, மற்றவர்களை எழுப்பிவிட்டு விட்டு, மேலச் சிந்தாமணிக்குப் போய்க் காவேரியில் குளிப்பான். வெள்ளம் இருந்தால், மற்றவர்கள் வரும் வரை நீந்திக் களிப்பான். சிறுவனாய் இருக்கையில் கிராமத்தில் நேர்ந்த ஜல விபத்துக்குப் பிறகு, அண்ணனுடன் அவனும் நீந்தக் கற்றுக் கொண்டிருந்தான். நல்ல தேர்ச்சியும் அடைந்திருந்தான்.

நீந்திக் களித்துத் துணி தோய்த்துக் கட்டிக் கொண்டு, கட்டுக் கட்டாய் விபூதி இட்டுக் கொள்வான். சரியாகச் சூரியன் உதிக்கும் வேளையில் சந்தியாவந்தனம் செய்வான். பிறகு மண்டபத்தில், வேதஞரிக்கு எதிரே மற்றவர்களுடன் பணிவுடன் அமர்ந்து சிரத்தையாக வேத பாராயணம் செய்வான்.

விடுதிக்குத் திரும்பியதும், தானகவே ஏதேனும் சுற்று வேலைகள் செய்வான். செய்ய வேண்டாம் என்று யாரேனும் தடுத்தால், தான் அங்கே தங்கி இருப்பதற்குக் கைம்மாறாகக் கொஞ்சம் வேலை செய்யத்தான் வேண்டும் என்பான். முதல் பந்தியில் உட்காராமல், இலை போடுவது, தண்ணீர் கொடுப்பது போன்ற காரியங்களைச் செய்த பின்னர்தான் சாப்பிடுவான். இரவில் பஜனைக்கு வேண்டிய ஏற்பாடுகளிலும் உதவி செய்து, பக்தியுடன் சுலோகங்களைப் பாடுவான். கோஷ்டிப் பாட்டில் உற்சாகமாய்க் கலந்து கொள்வான்.

அந்த விடுதியில் அவன் பயின்ற பணிவும் ஒழுக்கமும், கட்டுப்பாடும், பின்னர் திருச்செங்கோடு ஆசிரம வாழ்க்கைக்கும், பொதுவாகப் பல்வேறு வாழ்க்கை நிலைகளுக்கும் வேலை முறைகளுக்கும் பயன்பட்டன.

பள்ளிக்கூடப் பேரேட்டில் கிருஷ்ணமூர்த்தியின் பதிவு எண் 2912. அவனுடைய சிறப்புப் பாடங்கள் கணிதமும் பௌதிகமும். வேத பாராயணத்திலும் பஜனையிலும் முன்னணியில் உட்காரும் அவன், வகுப்புக்களில் பின் வரிசையில் உட்காருவான். அவனுடன் அந்தப் பள்ளியில் படித்து, பின்னர் ஐ.ஆர்.ஏ.எஸ். தேறி, ரயில்வே கணக்குத் தணிக்கை அதிகாரியாய் இருந்து ஓய்வுபெற்றுள்ள பி. ஜி. பாலகிருஷ்



ராஜாஜியின் பேரனும், டாக்டர் ராமசாமியின் கனிஷ்ட குமாரனுமான சிரஞ்சீவி வி. ஆர். சுதர்சனத்துக்கும், திருச்சி முதல் வகுப்பு மாஜிஸ்டிரேட் ஸ்ரீ கே. ராஜகோபாலன் அவர்கள் குமாரத்தி சௌ. ஜானகிக்கும் சமீபத்தில் சென்னையில் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. தமிழக கவர்னர் திரு கே. கே. ஷா, முதல்வர் திரு மு. கருணாநிதி, தலைவர் காமராஜ் முதலிய பல பிரமுகர்கள் வந்திருந்து மணமக்களை ஆசீர்வதித்தனர்.

## ஸ்ரீ வைஷ்ணவி தேவிக்கு நவராத்திரி

சென்னைக்கு அருகில் உள்ள திருமுல்லைவாயில் ஸ்ரீ வைஷ்ணவி ஆலயத்தில் 16-10-74ந்தேதி முதல் 24-10-74 முடிய நவராத்திரி உற்சவம் வெகு விமரிசையாக நடைபெறுகிறது: அப்பொழுது தினந்தோறும் அன்னதானம் செய்யத் திட்டமிடப்பட்டுள்ளது.

அக்டோபர் மாதம் 30ந் தேதி காலை சண்டி ஹோமமும் செய்ய உத்தேசிக்கப்பட்டுள்ளது.

இப் புனித கைங்கரியங்களுக்குத் தங்களால் இயன்ற பொருளுதவியைச் செய்யுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம். இந் நற்பணிக்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கான தொகையை டிரஸ்டிகள், ஸ்ரீ வைஷ்ணவி ஆலயம், திருமுல்லைவாயில், சென்னை - 600062 என்ற முகவரிக்கு அனுப்பி வைக்குமாறு கோரப்படுகிறது.

ணன். இவற்றையும் வேறு தகவல்களை யும் தெரிவித்தார்.

''வகுப்புக்களில் ஏன் பின்வரிசை யில் உட்கார்ந்தார்?'' என்று கேட்ட தற்கு, ''அடக்கத்தினால் இருக்க லாம்'' என்று பாலகிருஷ்ணன் பதில் சொன்னார். ''தன்னை மற்ற மாண வர்கள் கவனிக்காதபடி தான் அவர் களைக் கவனிப்பதற்காகவும் இருக்க லாம்!''

அந்தப் பின்வரிசை மாணவனை எல் லோரும் கவனிக்கும்படியான சந்தர்ப் பம் ஒன்று, அவன் நாலாம் படிவத்தில் சேர்ந்த புதிதிலேயே வந்தது. மாண வர்களின் ஆங்கில இலக்கியச் சங்கத்தின் முதற் கூட்டத்தில், நட்பின் பெருமை என்ற பொருள் பற்றி, பாலகிருஷ்ணன் பேசி முடித்ததும், துணைப் பேச்சாள னாகக் கிருஷ்ணமூர்த்தி மேடை ஏறி, சரளமான ஆங்கிலத்தினாலும் நகைச் சுவையினாலும் எல்லாரையும் வியக்க வைத்தான். பேச்சில் மட்டும் அல் லாமல் பாடங்களிலும் தமக்குப் போட்டியாகக் கிருஷ்ணமூர்த்தி இருந்த தையும் பாலகிருஷ்ணன் சொல்லி, ''அவன்மீது முதலில் கொண்ட பொறாமையைப் பின்னர் பாராட் டாக மாற்றிக் கொண்டேன்'' என்றார்.

நாலாம் படிவ ஆண்டுத் தேர்வில் கிருஷ்ணமூர்த்தி ஆங்கிலத்தில் வாங்கிய மதிப்பெண் 100க்கு 72; தமிழில் 65; சிறப்புப் பாடங்களில், கணிதத்தில் 83; பௌதிகத்தில் 87. எல்லாவற்றையும் விட அதிகமாக, ஆதாரக் கணிதத்தில் 88. பின்னால் வரலாற்று நாவல்கள் எழுதியவர், மாணாக்கராய் இருக்கையி லேயே சரித்திரத்தில் நிறைய அக்கறை கொண்டிருந்தார் என்பது, அதில் அவர் 75 சதவீதம் வாங்கினார் என்பது காட்டுகிறது. எல்லாப் பாடங்களிலு மாய்ச் சேர்ந்து மொத்தச் சராசரி 900க்கு 660.

நாலாம் படிவத்தில் முதல்வனைத் தேறியவன், ஐந்தாம் படிவத்திலும் அதே நிலையைக் கொண்டு, இறுதித் தேர்வில், மொத்தம் 700க்கு 502 மார்க்குகள் வாங்கினான். ஆங்கிலத்தில் 100க்கு 75; தமிழில் 57; சிறப்புப் பாடங்களிலே, கணிதத்தில் 97, பௌதி கத்தில் 58. மின் வகுப்பைப் போலவே ஆதார கணிதத்தில் மிக அதிகமாய், 97.

ஆறும் படிவத்தில் அரை ஆண்டுப் பரீட்சையை மட்டுமே கிருஷ்ண மூர்த்தி எழுதினான். அதில், ஆரம்ப கணிதத்தில் நூற்றுக்கு நூறு. ஆங் கிலம் 71, தமிழ் 72. இரு மொழிகளி



பிஹார் மாநில மக்களின் கைகள் பெரும்பாலும் சும்மா இருப்பதில்லை. ஓர் உள்ளங் கையைக் குழித்து இன்னொரு கையின் கட்டை விரலால் தேய்த்துக் கொண்டே இருப்பார்கள். எதற்காக இப்படிச் செய்கிறார்கள் என்று கவனித்துப் பார்த்தால், சுண்ணாம்பும் புகையிலையும் இணைந்து ஒரு கலவை யாவது தெரியும். அதற்குக் 'கைனி' என்று பெயர். அதை நண்பர்களுக்கும் கொடுத்துத் தாங்களும் பகுத்துப் புசிப்பதில் அவர்களுக்கு அலாதி ஆனந்தம். அதை வாயில் எங்கு அடக்கிக் கொள்கிறார்கள், தெரியுமா? பற்களுக்கும் உதடு களுக்கும் இடையே உள்ள பகுதியில்! விறுவிறு வென்று விண்ணுலக இன்பத்தையே அது தருவ தாகக் கூறுகின்றனர்! - ரா. வீ.

---

லும் கொண்ட இணையான அக்கறை யையும் தேர்ச்சியையும் இவை காட்டு கின்றன. சிறப்புப் பாடங்களில் அக் கறை குறைந்ததை, கணிதத்தில் 71ம், பௌதிகத்தில் 55ம் காட்டுகின்றன. மொத்தம் 700க்கு 474.

கல்வி படித்த இருச்சிப் பள்ளிக் கூடங்கள் இரண்டையும், அவருடைய குமாரர் ராஜேந்திரனும் இந்த நூலா சிரியனும் சுற்றிப் பார்க்கச் சென்ற போது, அவற்றில் மாணாக்கர் கிருஷ்ண மூர்த்தியின் மார்க்குப் பட்டியல் கிடைக்கும் என்று அவர்கள் எதிர் பார்க்கவே இல்லை. எதற்கும் முயன்று பார்க்கலாம் என்று பள்ளி அதிகாரி களைக் கேட்டபோது, அவர்கள் அலமாரி களைத் தேடி, ஐம்பது ஆண்டுகளுக்கும் முந்திய பதிவுப் புத்தகங்களைக் கண் டெடுத்து, எல்லா மார்க்குகளையும் காட்டி எழுதிக் கொடுத்தார்கள். ஆங் கிலத்தின் தரம் மிக உயர்வாய் இருந்த அந்தக் காலத்தில், மூன்று வகுப்புகளி லும் அதில் 70க்கு மேல் மார்க்கு வாங் கியது பெரிய சாதனை என்று, தேசியப் பள்ளியின் ஆசிரியர்கள் குறிப்பிட் டார்கள். முந்தியப் பள்ளியிலோ, மூன் றும் படிவத்தில் 80 சதவீதமே கிடைத் தது.

அந்த மார்க்குப் பட்டியலைத் தேடி எடுப்பதற்கு உதவியாய், கிருஷ்ண மூர்த்தி படித்த ஆண்டுகளையும் பதிவு எண்ணையும் தெரிவித்தவர் பால கிருஷ்ணன்தான். சென்னையில் அவரை நூலாசிரியன் பேட்டி கண்டபோது, அவருடைய வயதை விசாரித்தறிந்து, ''உங்களைவிடக் கிருஷ்ணமூர்த்தி நாலு வயது பெரியவர் என்பது தெரியுமோ?'' என்று கேட்டான். அவர் ஆச்சரியப் பட்டு, ''என்னைவிட இரண்டு மூன்று

வயது சின்னவனாய் இருப்பான் என்றல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன்?'' என்றார். பின்னர், எதையோ ஞாபகப்படுத்திக் கொண்டவராய் அவர் சொன்னார்: ''ஒரு நாள் மாலை அவன் ஒரு படிக்கட்டில் உட்கார்ந்து, ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தான். நான் பக்கத்தில் நின்றதைக் கவனிக்காமல் தலை மயிரைத் திருகிக் கொண்டே படபடவென்று படித்துக் கொண்டிருந்தான். அவனுடைய முகத்தை நான் உற்றுப் பார்த்தேன். மேல் உதட்டில் மீசை அரும்பி இருந்ததைக் கண்டேன். 'என்னடா அதுக்குள்ளே உனக்கு மீசை முளைச்சுடுத்து?' என்று கேட்டேன். 'ஏதோ முளைச்சுத் தொலைச்சுடுத்து போ' என்று சொல்லி விட்டு, எழுந்து படித்துக் கொண்டே நகர்ந்து போய்விட்டான்.''

''நீங்கள் கிருஷ்ணமூர்த்தியிடம் நிறையப் பேசி இருப்பீர்களே, அவர் ரசமாகச் சொன்னது ஏதேனும் நினைவிருக்கிறதா?''

''நாங்கள் நிறையப் பேசிக் கொண்டதே இல்லை. அவன் எப்போதும் எதையேனும் படித்துக் கொண்டே இருப்பான்; நானும் அப்படித்தான். அநேக நாள் மாலை வேளைகளில், அவனுடைய கிராமத்து நண்பர்கள் இருவர் வருவார்கள். அவர்களுடன் ஏதேனும் மரத்தடியில் உட்கார்ந்து பேசுவான்; அல்லது அவர்களுடன் கைகோத்துக் கொண்டு வெளியே போவான்.''

பாலகிருஷ்ணன் குறிப்பிட்ட நண்பர்கள், ஆர். கே. சுப்பிரமணியமும் முத்துக் கிருஷ்ணனும்தாம். சுப்பிரமணியம் அர்ச்சு ஜான் கல்லூரியிலும், மற்றவர் பிஷப் ஹீபர் கல்லூரியிலும் படித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் மூவருமோ, மூவரில் இருவரோ, அநேகமாய் மாலை வேளைகளில் ஒன்றாகவே இருப்பார்கள். தேசத் தொண்டு செய்யப் போவதாய்க் கிருஷ்ணமூர்த்தியும், விவேகாநந்தரைப் போல் பிரம்மசரிய விரதம் பூணப்போவதாய் முத்துக்கிருஷ்ணனும் சொல்லிக் கொண்டே யிருப்பார்கள்.

சுப்பிரமணியத்துக்கு எதிர்பார்த்த படியே, விரைவில் கல்யாணம் ஆகிவிட்டது. வடக்கு ஆண்டாள் தெருவில் அவர் குடும்பஸ்தனாய் அமர்ந்தார். தம் வீட்டுக்கு அவர் கிருஷ்ணமூர்த்தியையோ, முத்துக்கிருஷ்ணனையோ, இருவரையுமோ அடிக்கடி அழைத்துப் போய் விருந்து வைப்பார். தேசப் பித்தும் வேதாந்தப் பித்தும் மாறி மாறிப் பேசி முழக்குவதை, இளம் தம்பதியர் கேட்டு மகிழ்வார்கள். அந்தப் பித்தர்கள் பேச்சோடு நில்லாமல் செயலில் இறங்குவார்கள் என்று அப்போது அவர்கள் நினைத்திருக்கமாட்டார்கள்.

வாரத்துக்கு ஓரிரண்டு நாள் சித்தி வீட்டுக்குக் கிருஷ்ணமூர்த்தி போய்த் தம்பி சுப்புணிக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பான். தேசத்துக்காகப் போராடப் போவதாய்த் திரும்பத் திரும்பச் சொல்லிச் சித்தி பயப்படும்படி செய்வான்.

அந்தப் பள்ளி நாட்களில் நடந்ததான நிகழ்ச்சி ஒன்றைப் பலரும் சொல்கிறார்கள். அது உண்மையா என்பதைத் துலக்க முடியவில்லையாயினும், கிருஷ்ணமூர்த்தியின் இயல்புக்கு அது பொருத்தமாய் இருப்பதால், அதை இங்கே சொல்லலாம்.

ஒரு நாள் கிருஷ்ணமூர்த்தி, கல்லூரி மாணவர்களுக்கான நூலகத்தில் ஓர் ஆங்கிலப் புத்தகத்தை எடுத்துப் படித்துக் கொண்டிருந்தானாம். அதைக் கவனித்த பேராசிரியர் ஒருவர், ''ஸ்கூல் பையனை உனக்கு இந்தப் புத்தகம் புரியுமா?'' என்று கேட்டாராம். அவருக்குத் தக்க பதிலைக் கிருஷ்ணமூர்த்தி கொடுத்தானாம்: ''சுயராஜ்யம் வேண்டும் என்ற எண்ணம் இந்தியர்களுக்குத் தோன்றியிருப்பதே அவர்கள் அதற்குத் தகுதி உள்ளவர்கள் என்பதை நிரூபிக்கிறது என்பதாக அன்னி பெஸண்ட் சொல்லியிருக்கிறார். அது போலவே, இங்குள்ள புத்தகங்களைப் படிக்க வேண்டும் என்று நான் கொண்டுள்ள ஆசையே இவற்றை நான் படிக்கத் தகுந்தவன் என்பதை நிரூபிக்கிறது அல்லவா?''

இந்தச் சம்பவம், ஐந்தாவது அல்லது ஆறுவது படிவத்தில் கிருஷ்ணமூர்த்தி படிக்கையில் நிகழ்ந்திருக்க வேண்டும். ஏனெனில், அவன் ஐந்தாவது படிவத்தில் படித்த 1919ல்தான், தேசியப் பள்ளியுடன் கல்லூரி வகுப்புக்கள் சேர்க்கப்பட்டன.

அரைகுறையாய் ஆறுவது படிவத்தில் கிருஷ்ணமூர்த்தி படிக்கையில், பாடப் பயிற்சிக்காக அவன் எழுதிய ஆங்கிலக் கட்டுரை ஒன்று அகப்பட்டுள்ளது. ''மல்யுத்தப் போட்டி'' என்ற இந்தக் கட்டுரை, ஷேக்ஸ்பியர் கதை ஒன்றின் ஒரு பகுதியைத் திரும்பச் சொல்வதாய் அமைந்திருக்கிறது. மாணவன் கிருஷ்ணமூர்த்தியின் இளமைக் கால ஆங்கில நடைக்கும் கையெழுத்துக்கும் இது ஓர் எடுத்துக்காட்டாய் இருக்கிறது. (தொடரும்)

# கட்டிக் கலைத்த கூடுகள்

## கமலீஜோஷி

"நீங்கள் விவாக ரத்து வேண்டுகிறீர்களா?'' என்று கேட்டான் விக்கிரமன்.

''ஆமாம்!''

அழகி பொருத்தி சொன்னாள், தலையைக் குனிந்து கொண்டு. அவளுக்கு வயது முப்பது—முப்பத்திரண்டு இருக்கலாம். ஆனால் மிகவும் சங்கோசமுள்ளவளாகத் தோன்றினாள்.

''கணவருக்கெதிராக ஏதாவது 'ஸ்பெஸிஃபிக் சார்ஜ்' — குறிப்பான குறைபாடு?''

அழகி கண்களை அகல விரித்துப் பார்த்தாள். புதிய சாட்சி நீதிமன்றத்துச் சாட்சிக் கூண்டில் ஏறினால் பதற்றமுறுவாளே, அப்படி இருந்தது அவள் பார்வை.

விக்கிரமன் மீண்டும் சொன்னான்: ''கணவனுக்கெதிராக ஆறு வகைக் குற்றங்கள் நீங்கள் சுமத்தலாம். என்ன குற்றம் சுமத்த விரும்புகிறீர்கள்? நடத்தைப் பிசகா? மந்த மூளையா? மத மாற்றமா? அல்லது...?''

''நான் எந்த வகைக் குற்றமும் சுமத்த விரும்பவில்லை. என் கணவர் நேர்மையானவர், நல்லவர்!''

''அப்படியானால் நீங்கள் ஏன் விவாக ரத்து விரும்புகிறீர்கள்? ஏதாவது 'மேனரிஸம்' உண்டா? இரவில் தூங்கும்போது பெருங் குறட்டை விடுகிறாரா? உங்களைப் பொருட்படுத்துவதில்லையா? வெறுக்கிறாரா? அல்லது தம் சிந்தனையில் மட்டுமே திளைத்திருக்கிறாரா?''

''இல்லை. அப்படியும் இல்லை. இப்பொழுது தான் இரண்டு மாதங்களுக்கு முன்பு, என்னையும் குழந்தைகளையும் ஜகந்நாதபுரிக்கு அழைத்துச்சென்று சுற்றிக் காட்டி வந்தார்.''

''குழந்தைகளா? உங்களுக்குக் குழந்தைகள் இருக்கின்றனவா?''

''ஆம். ஒரு பெண்ணும் பையனும் இருக்கிறார்கள். பள்ளியில் படிக்கிறார்கள்.''

''அப்படியானால் இந்த விவாகரத்து எதற்கு? நீங்கள் வேறு யாரையாவது காதலிக்கிறீர்களா? உங்கள் வாழ்வில் உங்களுக்கு இன்பமே கிட்டுவதில்லை போல் தோன்றுகிறதா?''

''ஆம். அப்படித்தான். நீங்கள் சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். எனக்கு என் கணவரிடம் அன்பு உண்டு. ஆனால் அவரைக் காட்டிலும் இன்னொருவரிடம் அதிக அன்பு கொண்டிருக்கிறேன். தவறாக எண்ணாதீர்கள். நான் நிலையைத் தெளிவாக விளக்கி விடுகிறேன். அந்த இன்னொருவர் என் கணவருடைய மாணாக்கர். வயதில் என்னைக் காட்டிலும் சிறியவர். ஆனால் அன்புக்கும் வயதுக்கும் என்ன சம்பந்தம்?''

''நீங்கள் சொல்வதில் நியாயம் இருக்கிறது!'' — விக்கிரமன் கூறினான்: ''அன்பு என்பது மனத்தின் ஒரு நிலை. 'ஸ்டேட் ஆஃப் மைண்ட்'. யாருக்கு எது எப்போது பிடிக்கும் என்று யாராலும் சொல்ல முடியாது. காதல் ஒரு பச்சோந்தி. அது அடிக்கடி நிறம் மாறும் என்பதே என் கருத்தும்கூட. நீங்கள் மிகவும் 'போல்ட்' — துணிச்சல்காரர்!''

ஒரு கணம் மௌனம் சாதித்த விக்கிரமன் மீண்டும் தொடர்ந்தான்: ''தங்கள் கணவரிடமோ மனைவியிடமோ அன்பு இல்லை என்னும் உண்மையை ஒப்புக்கொள்ளச் சிலர் சங்கோசப்படுகிறார்கள். நீங்கள் அதற்கு விதிவிலக்கு. நான் உங்கள் கேஸை எடுத்துக் கொள்ளுகிறேன்!''

''ஆனால் குற்றம்...? என்ன சுமத்துவது என்றுதான் எனக்கு விளங்கவில்லை.''

''எனக்கு யோசிக்க அவகாசம் கொடுங்கள். அதோ சின்னப் புஸ்தகம் ஒன்று இருக்கிறது. பாருங்கள். 'ஹிந்து மாரியேஜ் ஆக்ட் 1955' அதற்கு அபார ஆற்றல் உண்டு. ஏதாவது ஒரு 'சார்ஜ்' — குற்றம் சுமத்த அது வழி கூறும். விவாக ரத்துக் கிடைத்து விட்டதாகவே நீங்கள் நம்பலாம். அதற்கு முன் ஜுடிஷியல் ஸெபரேஷன் — 'நீதிபூர்வமான பிரிவு' பெற்றுக் கொண்டு விடுங்கள். மனத்தில் விரிசல் ஏற்பட்டு விட்டால் அதை மெழுகி மூடி மறைக்க முயலாமல் இருப்பதே நல்லது. வாழ்வில் புதுத் தொடக்கத்தைப் புது முறையில் ஆரம்பித்து விட்டுப் போங்கள்!'' என்றான் விக்கிரமன்.

* * *

ஒரே ஒரு ஆசாமிக்கு மட்டும் விக்கிரமனால் இவ்விஷயங்களை விளங்க வைக்க முடியவில்லை. அவள்தான் அவன் மனைவி நீனா. பிராக்டிஸ் தொடங்கிய பொழுதே விக்கிரமனுக்குத் திருமணம் ஆகிவிட்டது. 'திருமணம் செய்து கொள்வது நல்லது. ஏனென்றால் இந்த வழக்கறிஞர் தொழில் இருக்கிறதே, இது மிகவும் 'இன்டிவிஜுவலிஸ்ட்' தனித்தன்மை வாய்ந்தது. தனித்திருந்தால் 'போர்' அடித்துப் போய்விடும். மனைவி இருந்தால் அவன் ஊக்கிக் கொண்டே இருப்பாள். துடுப்பு இல்லாமல் படகு ஓடுமா?'' என்று அவன் சீனியர் அடிக்கடி சொல்வார்.



இப்படி ஒரு தூண்டுதல் இல்லாவிட்டாலும் விக்கிரமன் திருமணம் செய்து கொள்ளுகிறவன்தான்! அதுவும் காதல் கல்யாணம். கல்லூரியில் படித்து வந்தபோதே காதல் சுழலில் சிக்கிக் கொண்டான் அவன். சட்டப் பரீட்சை தேறும்வரைகூட இந்தக் காதலுக்குப் பொறுமை இருக்கும் என்று தோன்றவில்லை. கல்யாணம் செய்துகொள்ளத் துடித்தது. 'பாரி'ல் சேரும்வரை எப்படியோ அதன் துடிப்பை அடக்கினான். அப்புறம் அது அவனை அடக்கிக் கல்யாண புருஷனாக்கி வைத்தது.

'பாலை பிடித்தவள் பாக்கியம்! அவள் காரணமாகத்தான் உனக்குப் பொருளும் புகழும் கிடைக்கின்றன' என்று அவன் நண்பர்கள் பார்க்கும் போதெல்லாம் கூறுவார்கள்.

ஆனால் நீரஜாவின் முகத்தில்தான் சிரிப்பையே பார்க்க முடியவில்லை. "கட்டிய கூட்டைக் கலைப்பதுதான் உங்கள் வேலையா? இன்று எத்தனை கூட்டை அழித்தீர்கள்?" என்று அவன் நீதிமன்றத்திலிருந்து திரும்பி வந்ததும் வராததுமாகக் கடிவாள்.

விக்கிரமன், "நான் எதற்குக் கட்டிய கூட்டைக் கலைக்கிறேன்? புதிய கூடு கட்டுவதற்காகத்தானே?" என்று சிரித்து மழுப்புவான்.

"ஆமாம், மனிதர்களின் மனம் வெறும் களிமண்ணு, என்ன? ஒரு பொருளைச் செய்துவிட்டு அதை உடைத்து, மீண்டும் தட்டிக் கொட்டிப் பிசைந்து சரிசெய்வதற்கு?"

"மண் இல்லை யென்றால் என்ன அசைக்க முடியாத உறுதிமிகு கல்லோ? மனசு ஒரு 'டைனமிக்'—அதாவது சலன-யந்திரம். மனிதன் உயிர் வாழ்கிறான் என்பதற்கு இதுவே சான்று. உயிர் இருப்பதனால்தான் ஒரு பொருள் அசைந்து கொடுக்கிறது. ஓட்டம் தடைப்பட்டால் நீர் குட்டை ஆகி விடுகிறது. அதனால் அன்பின் ஓட்டத்திலும் மாற்றம் நிகழலாம்."

"அன்பு என்பது காய்கறி, கீரையா? அழுகிப் பழசாவதற்கு? உண்மையான அன்புக்கு மாற்றமே கிடையாது."

"முதற் பிறைச் சந்திரன் முழுப் பிறையின் போது பழசாகி விடுகிறானா?" என்பான் விக்கிரமன்.

"இதெல்லாம் கட்சிக்காரர்களைத் திசை திருப்பி விடுகிற விஷயம்."

"ஆனாலும் உண்மைதானே? மனம் முறியும் — முறிய வேண்டும் என்று நான் கூறவில்லை. ஆனால் முறிந்தால் அதை நாம் ஏன் இயல்பாக எடுத்துக் கொள்ளக் கூடாது என்றுதான் கேட்கிறேன். பழைய இயந்திரங்களை மாற்றுவது போலத் தேய்ந்து போன பழைய காதலையும் மாற்றலாம். மாற்ற முடியாது என்று கூறுவது வெறும் வெளி வேஷம். ஏமாற்றுச் சொல். இதை நீ ஏற்கவில்லையா?"

"முடியாது. ஏற்க முடியாது!"

விக்கிரமனின் கட்சிக்காரர்கள் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டிருந்தார்கள். அவன் உடலும் அதற்கேற்ப வளர்ந்து வந்தது. பணமும் கூடத்தான். விக்கிரமன் தன் பிழை எவ்வளவோ உயர்த்தி விட்டான். அப்படியும் கட்சிக்காரர்களின் வருகை குறையவில்லை.

முன்பெல்லாம், ஞாயிற்றுக்கிழமை விடுமுறை கொண்டாடுவான் விக்கிரமன். நீரஜாவை எங்காவது அழைத்துச் செல்வான். சினிமா, அது இது என்று! இப்பொழுது அதுவும் நின்று விட்டது. ஞாயிற்றுக் கிழமையிலும் கூடக் கட்சிக்காரர்கள் வரத் தொடங்கியதுதான் காரணம்.

இத்தனை மனிதர்களா விவாகரத்துக் கோருகிறார்கள்?

எப்பொழுதாவது மூத்த சீனியரை விக்கிரமன் சந்திப்பது உண்டு. "பிராக்டிஸ் நன்றாக நடக்கிறதல்லவா? நீ எப்படி இருக்கிறாய்? உன் வீட்டுக்காரி எப்படி இருக்கிறாள்? அவள் பலே அதிர்ஷ்டக்காரியப்பா!" என்பார் அவர்.

விக்கிரமனுக்கு அது ஆறுதலாகப் படும். "ஆனால், சார்! நீரஜா ஒப்புக்கொள்ளவேமாட்டேன் என்கிறாள். அவளுக்கு இது கட்டிய கூட்டைக் கலைப்பதாகத்தான் படுகிறது. விவாகரத்திலும் ஒரு தத்துவம் இருக்கிறது என்பதை அவள் ஏனோ ஏற்கவில்லை!" என்பான்.

"வக்கீல் தொழில் என்பது காகங்களின் வாழ்க்கைக்கு ஒப்பானது. காக்கைகள் இருப்பதனால்தான் உலகில் அசுத்தங்கள் குறைகின்றன. அதற்காக யாராவது காகங்களைப் பாராட்டுகிறார்களா?" என்பார் சீனியர். விக்கிரமனுக்கு உச்சி குளிர்ந்து விடும்.

அந்தப் பெண்மணி மீண்டும் வந்தாள்.

"நான் உங்கள் கேஸை நன்றாக 'ஸ்டடி' செய்து விட்டேன். சட்டத்தின் பத்தாவது 'பி' பிரிவைப் படிக்கிறேன், கேளுங்கள். 'எனி பர்ஸன் ஹூ ஹேஸ் ட்ரீடட் தி பெடிஷனர் வித் ஸச் க்ருயல்டி ஸோ ஆஸ் டு காஸ் எ ரீஸனபள் அப்ரிஹென்ஷன் இன் தி மைண்ட்...'

"நீங்கள் இந்தக் 'குருயல்டி'யை மீண்டும் ஏன் இழுக்கிறீர்கள்? 'குருயல்டி' என்றால் கொடுமை அல்லவா?"

"கொடுமைதான்!" என்றான் விக்கிரமன். "அடிப்பதும் உதைப்பதும் மட்டும் கொடுமையல்ல. மனத்தைத் துன்புறுத்துவதும்கூடக் கொடுமைதான். இரவு பகல் எப்பொழுதும் உங்கள் கணவர் புத்தகங்களிலேயே மூழ்கி





**பிரும்மச்சாரி முருகன்!**

பூனாவில் பார்வதி மலை என்று ஒரு குன்று இருக்கிறது. அங்கே முருகன் கோயில் கொண்டிருக்கிறான். கார்த்திகேயன் என்ற பெயரில். கோயிலுக்குள் பெண்களை அனுமதிப்பதில்லை. அதற்கு அந்த ஊர்க்காரர்கள் சொல்லுகிற காரணம் விசித்திரம். அவர்கள் கருத்துப்படி முருகன் திருமணம் ஆகாத பிரம்மச்சாரிக் கடவுள். அவர் பெண்களைப் பார்ப்பதும் பெண்கள் அவரைப் பார்ப்பதும் வேண்டாத காரியம்!



**மாமிச நிவேதனம்!**

பூரி ஜகந்நாதர் கோயிலில் விமலாதேவி என்னும் தெய்வத்துக்கு ஒரு கோயில் இருக்கிறது. இத்தெய்வத்துக்கு ஆண்டிலே மூன்று நாட்களுக்கு மட்டும் மாமிச ஆகாரத்தை நிவேதனமாகப் படைக்கிறார்கள். துர்க்கா பூஜையின்போது இந்த நிவேதனம் நடக்கிறது. ஆடு, மீன், இவற்றை அர்ப்பணிக்கிறார்கள். நைவேத்தியமாக வரும் மீனை நரேந்திர குளம் என்கிற குளத்திலிருந்துதான் பிடித்து வர வேண்டும். அந்தக் குளத்தில் வேறு யாரும் மீன் பிடிக்கக் கூடாது.

- மயிலன்

---

யிருக்கிறார் என்று நீங்கள்தானே சொன்னீர்கள்? குடும்ப விஷயங்களில் அக்கறை காட்டுவதில்லை. குழந்தைகளைக் கொஞ்சுவதில்லை என்றெல்லாம் சொன்னீர்களே! இந்த 'அபெதி' — அதாவது அலட்சியமும் கூட ஒரு வகையில் பெரும் கொடுமைதான். திருமண விலக்கு மட்டும் என்ன, அதற்கான செலவும்கூட அவர் தரவேண்டும்!''

''செலவை வாங்கிக்கொள்வதால் என்ன பலன்? அவருடன் இணைந்து வாழ்வதில்லை என்று தீர்மானித்த பின் அது எதற்கு? அன்பின் மதிப்புத் தெரியாதவரிடம் பணத்தை அதற்கு விலையாகப் பெறுவதில் என்ன பெருமை? எனக்குப் பணம் காசில் ஆசையில்லை. விபினுடைய அன்பே எனக்கு லட்சம் ரூபாயைக் காட்டிலும் பெரிசு; மேலானது. அரசாங்கக் கல்லூரியில் அவருக்கு வேலை கிடைத்து விட்டது. எங்கள் வாழ்க்கை மகிழ்ச்சியுடன் கழிந்துவிடும்.'' என்றாள் அவள்.

''அது சரி, அதற்காக உங்களுக்குக் கிடைக்கக்கூடிய உரிமைத் தொகையை வேண்டாம் என்று விடுவானேன்?'' என்றான் விக்கிரமன்.

அப்பெண்மணியின் கணவர் எதிர் வழக்காடவில்லை. இம்முறையும் விக்கிரமனுக்கே வெற்றி கிட்டியது.

இப்பொழுது ஜுடிஷியல் ஸெபரேஷன். குழந்தைகளைப் பராமரிக்க வேண்டிய பொறுப்பும் செலவும் அவள் கணவர் சிரிதாரியைச் சேர்ந்தது. பெண்மணி ஜீவனாம்சத் தொகை கேட்கவில்லை.

இதுவரை விக்கிரமனுக்கு வெற்றியே கிட்டி வந்திருக்கிறது. ஒரு வழக்கிலாவது அவன் தோல்வியை எதிர் கொள்ளவில்லை. எல்லா வழக்குகளிலும் ஒருதலைப்பட்சத் தீர்ப்பே அவனுக்குக் கிட்டி வந்திருக்கிறது. சட்டம் என்பது ஒரு கூரிய அம்பு.—அதன் குறி சரியாக இருக்க வேண்டும். சரியாக எய்து விட்டால் வெற்றி உறுதி!

பீஸாக அவனுக்குக் கனத்த தொகை கிடைத்துவிட்டது. இளம் பேராசிரியர் விபினும் அப்பெண்மணியும் அவனைக் காரில் கொண்டு வந்து விட்டுப் போனார்கள். விபினுக்கு ஏக மகிழ்ச்சி!

இன்று விடுமுறைதான்; இனி இளைப்பாற வேண்டியதுதான். வெகுநாட்களாக அவனுக்கு ஓய்வே கிடைக்கவில்லை. வழக்குகளைப் பற்றிப் படித்துக் குறிப்பெடுப்பதிலேயே தினமும் இரவு ஒன்று — இரண்டு என்றுகூட மணி அடித்துவிடுவதுண்டு.

**வி**க்கிரமன் மேலே போய் நாற்புறமும் பார்த்தான். நீருவை எங்குமே காணோம். அவனுக்கு வியப்பாயிருந்தது. நீருவுக்குப் பதில் வேலைக்காரன் கஜாதரன் வந்தான்.

'' அம்மா எங்கே ?''

'' டாக்ஸி கொண்டு வரச் சொன்னாங்க. கொண்டு வந்தேன். ஒரு சூட்கேஸை எடுத்துக் கொண்டு அதிலே போனாங்க !''

''ஏதாவது சொல்லிவிட்டுப் போனாங்களா? சூட்கேஸ் எடுத்துண்டு போனாங்கன்னு, எங்கே போயிருப்பாங்க ?''

''தெரியலேங்க. என்னிடம் சொல்லி விட்டுப் போகவில்லை. ஆனால்....'' கஜாதரனுக்கு நினைவு வந்தது : ''ஒரு கடிதம் கொடுத்துட்டுப் போனாங்க !'' என்றான்.

ஒவ்வொரு சமயம் நீரு இப்படிப் போவதுண்டு. தனியாகச் சினிமாவுக்குப் போவாள். கடைகண்ணிக்குப் போவாள். அத்தை வீட்டுக்குப் போவாள். விக்கிரமன் தடை சொன்னதில்லை. இதிலே தடை சொல்ல என்ன இருக்கிறது ? தன் பொழுதை எப்படியோ போக்கிக் கொள்ளுகிறாள் அவள். விக்கிரமன்தான் அவளை எங்கும் அழைத்துப் போவதில்லை. கட்சிக்காரர்களை விட்டுவிட்டு அவனால்எங்கேவெளியே போய்வர முடிகிறது?

இந்த உலகத்தில் எந்த வேலைக்குமே ஒரு லயம் உண்டு. எதிலும் மனம் லயிக்கவில்லை என்றால், அதன் பொருள் தாளம் தவறுவ

தாகும். வேறு கவலை என்றால், சுரம் பிசகிப் போகும். ஊர்வசி எவ்வளவு அழகு! தாளம் தவறி ஆடியதனால் அவளைத் தேவர்கள் சொர்க்கத்திலிருந்து வெளியேற்றிவிட வில்லையா ?

ஆரம்பத்தில் நீரஜா விக்கிரமனைத் தன்னோடு வரவேண்டும் என்று வற்புறுத்துவாள். இப்பொழுதெல்லாம் அப்படிச் செய்வதில்லை. அவன் நடந்து கொள்வது அவளுக்குத் தவறாகப் படுகிறதா, இல்லையா என்பது விக்கிரமனுக்குத் தெரியாது. அவன் அவ்வளவு 'சென்டிமென்டல்' ஆகிவிட்டால், அப்புறம் வக்கீல் தொழில் நடத்துவது எப்படி ?

எது எப்படிப் போனாலும் சரி, விக்கிரமனுக்கு ஒரு நம்பிக்கை, நீரஜா சிறந்த கற்புக்கரசி என்று ! முடியுமானால் பண்டைய காலத்து ஹிந்துப் பெண்மணிகளைப் போல் அவள் கணவனை வழிபடவே செய்வாள். இத்தனை படித்த பின்னும் நீரஜா விவாகரத்தில் நம்பிக்கை கொள்ளவில்லை. குடும்பம் அழிவது-அதாவது கட்டிய கூட்டைக் கலைப்பது அவளுக்குச் சற்றும் பிடிக்காத விஷயம். விக்கிரமனுடைய தர்க்கங்களில் எல்லாம் நீரஜா மயங்கியதில்லை; மயங்கவும் மாட்டாள்.

ஆனால் இன்று கடிதம் கொடுத்துப் போயிருக்கிறாளாமே, எதற்கு? எங்கேயாவது வெளியே போய்வருவதென்றால், கடிதம் எழுதத் தேவை ? விக்கிரமன் நீரஜாவை முழுசாக நம்பினான்.

ஆனால் கடிதத்தைப் படித்ததும் விக்கிரமனின் விழிகள் விரிந்தது விரிந்தபடி நிலைத்து விட்டன. 'அம்மாவுடன் வேறு யாராவது இருந்தார்களா ?' என்று கஜாதரனைக் கேட்டான்.

''ஒருத்தர் இருந்தாரு ! முப்பது-முப்பத்தைந்து வயது இருக்கும். 'ஹர்பன்ஸ் ! சற்று இரு! ஒரு நிமிஷத்திலே வந்துவிடுகிறேன்!' என்றாங்க அம்மா அவரிடம்.''

''ஹர்பன்ஸ் ? என்ன பெயர் சொன்னே ? ஹர்பன்ஸா ? பார்க்கிறதற்கு எப்படி இருந்தார் ?''

''நல்ல கட்டான உடல், சிவப்பு நிறம். கண்ணாடி போட்டுக்கிட்டிருந்தாரு !''

விக்கிரமன் மறுபடியும் ஒருமுறை கடிதத்தைப் படித்தான். அதில் எழுதியிருந்தது : ''மிகுந்த யோசனைக்குப் பிறகு இந்த முடிவுக்கு வந்துள்ளேன். நான் செய்த தவற்றைத் திருத்திக் கொள்ளக் காலம் கடந்துவிடவில்லை என்பதை உணர்ந்தேன். ஹர்பன்ஸும் என்னைப் போல் முன்பு யாரையோ காதலித்தவர்தான். ஆனால் கிடைத்தது...? இருவரும் ஒரே மாதிரியான துயரத்தில் உழல்பவர்கள் என்பதைக் கண்டோம். எனவே, நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் காதலிப்பது என்ற முடிவுக்கு வந்தோம்.

'' தவறாக நினைக்காதீர்கள். 'காதலில் மாற்றம் ஏற்படுவதுண்டு. காதல் நிறம் மாறுவதுண்டு' என்று நீங்கள்தானே சொல்லியிருக்கிறீர்கள்! 'காதல் முறிந்தபின், அல்லது முடிந்தபின், பிறர் உண்மை அன்பு என்று நினைக்கும்படி நடந்து கொள்ளுவது வெளிவேஷம், குகம்புத்தனம்' என்றும் கூறியிருக்



**பேசாத தம்பிக்கு ஒரு கோயில் !**

ராமாயணப் பாத்திரங்களிலே பேசாத தம்பி என்று சத்ருக்னனைப் புலவர்கள் வியப்போடு குறிப்பிடுவர்.

பேசாத இந்த அருமைத் தம்பிக்கு நம் தேசத்தில் கோயில் ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனாலும், ஒரிஸ்ஸா மாநிலத்தில் சத்ருக்னமூர்த்திக்கு ஒரு காலத்தில் கோயில் எடுத்துச் சிறப்புச் செய்திருக்கிறார்கள்.

லட்சுமணன், பரதன், சத்ருக்னன் இம்மூன்று சகோதரர்களுக்குமே ஒரிஸ்ஸாவில் கோயில்கள் உண்டு. இவற்றில் பரதாழ்வார் கோயில் மட்டும் அதிகமாக அழிந்து போகாமல் இன்றைக்கும் இருக்கிறது. மற்றக் கோயில்கள் காலவெள்ளத்தால் சிதிலமாகிவிட்டன.

- மயிலன்

---

கிறீர்களே! உங்கள் பேச்சுக்கு இன்று மதிப்புக் கொடுப்பதாகத் தீர்மானித்து விட்டேன் !''

மரண தண்டனையைச் செவிமடுக்கும் பொழுது, எந்த நிலை ஏற்படுமோ அந்த நிலை விக்கிரமனை ஆட்கொண்டது. நீரஜா! நீரஜாவும் கடைசியில் அவன் பேச்சை நம்பிவிட்டாளே! நீரஜாகூட அல்லவா காதல் மாறக் கூடும், பச்சோந்தியென நிறம் கொள்ளக்கூடும் என்று இன்று முடிவுக்கு வந்துவிட்டாள் ! தனது வாதங்கள் இதுபோன்ற பேரழிவில் கொண்டுவிடும் என்று விக்கிரமன் மனத்தால் கூட எண்ணிப் பார்த்ததில்லை.

நீதி மன்றத்தில் நீரஜா ஜுடீஷியல் ஸெபரேஷனுக்கு வழக்குத் தொடர்ந்தாள். அவள் தாக்கல் செய்த காரணம் கணவன் கொடுமைப்படுத்துகிறான் என்பது. விக்கிரமன் யோசித்தான். தனக்குத் தானே வக்கீலாகிக் கட்சி ஆடலாமா என்றும் எண்ணினான்.

ஆனால் விக்கிரமன் எதிர்வழக்காடவில்லை, எந்த முகத்தைத் தூக்கிக் கொண்டு அவன் நீதி மன்றத்தில் போய் நிற்க முடியும் ? சட்டத்தைச் சட்டத்தால் எதிர்க்கலாம். வெற்றி பெறவும் செய்யலாம். ஆனால் வெறுப்பாக மாறிய அன்பு மீண்டும் தன்மை மாறுமா ?

அந்தக் கணத்தில், இத்தனை நாட்களுக்குப் பிறகு விக்கிரமன் ஓர் உண்மையை உணர்ந்தான். இது வரை வழக்குகளில் அவனுக்குத் தோல்விதான் கிட்டியிருக்கிறது என்று ஊர்ஜிதமாகி விட்டது. நம்பிக்கைக்கு எதிராகப் போர் தொடுத்து அவன் பலமுறை வெற்றி கண்டிருக்கிறான். நம்பிக்கைகளை அழித்து அவநம்பிக்கைகளை வளர்த்திருக்கிறான்.

அதனால்தான் அவனுக்கு இதுவரை வழக்குகளில் எல்லாம் சாதகமான தீர்ப்பே கிடைத்து வந்திருக்கிறது. ஆனால் உண்மையில் அப்பொழுதெல்லாம் விக்கிரமன் தோல்வியைத்தான் தழுவியிருக்கிறான் !

ஹிந்தியிலிருந்து தமிழாக்கம்: ரா. **வீழிநாதன்**

# திருடர்கள்

ர.சு.நல்லபெருமாள்



## 15. வெளியீட்டு விழா

வெளியீட்டு விழாப் பந்தலுக்குள் சம்பத் சென்ற போது, முன் வரிசையில் அமர்ந்திருந்த நளினியைக் கண்டதும் உற்சாகம் அடைந்தான். அவளுக்கு அருகில் அமர்ந்திருந்த அவளுடைய தந்தை ராகவனுக்கு மரியாதையாக ஒரு வணக்கத்தைச் செலுத்தினான். அவனைத் தனக்குப் பக்கத்தில் இருந்த நாற்காலியில் அமரும்படி கண்களால் சைகை செய்தாள், நளினி. அவள் காட்டிய நாற்காலியில் ஒரு கைக்குட்டை கிடந்ததைக் கண்டு தயங்கினான் சம்பத். அதை நளினி எடுத்துக் கொண்டு அவனுக்கு மட்டும் கேட்கும்படியாக, "நான்தான் போட்டேன்" என்றாள். நாற்காலியில் அவன் அமர்ந்ததும், நளினி, "ஏன் இவ்வளவு நேரம்? நான் வந்து அரை மணி நேரமாகிறது" என்றாள்.

"ஸீனியரின் ஆபீஸிலிருந்து வருகிறேன். இவ்வளவு நேரம் வேலை வாங்கிவிட்டார்" என்றான் அலுப்புடன்.

"அவர் வரவில்லையா?"

"அவரோடுதான். நானும் வந்தேன். வாசலில் யாருடனோ பேசிக் கொண்டிருக்கிறார்" என்றான் சம்பத். அந்தச் சமயம் அங்கு கலெக்டர் வரவே, அவருடன் பேசுவதற்காக எழுந்த ராகவன், அவரோடு பேசியவாறே மேடையை நெருங்கியவர், அதன் பக்கத்திலிருந்த பெரிய சோபாவில் அவருடன் சேர்ந்து அமர்ந்து விட்டார்.

"நல்லவேளை உன் அப்பா அங்கே போய்விட்டார்" என்றான் சம்பத்.

"ஏன்?" — நளினி கேட்டாள்.

"அவர் இருந்தால் நீ பேசவே மாட்டாயே."

"பேசுவதற்கா இங்கே வந்திருக்கிறோம்?"

"பின்னே, எல்லோரும் இங்கே எதற்காகக் கூடியிருக்கிறார்கள்? பாரேன். எல்லாரும் சளசளவென்றுதான் பேசிக் கொண்டிருக்கிறார்கள்" என்றான் சம்பத்.

நளினி சிரித்தாள். "கூட்டம் பிரமாதம்" என்றாள்.

"பெண் எழுத்தாளர் இல்லையா?" என்றான், சம்பத், அலட்சியமாக.

"ஓ...! பெண்ணுக்காகத்தான் இந்தக் கூட்டமோ? அவளுடைய எழுத்துக்காக இல்லையா?"

"நீதான் அவளுடைய கதைகளைப் படித்திருக்கிறாயே. அவளுடைய எழுத்துத் திறமையைப் பற்றி உனக்குத் தெரியுமே."

"இன்று வெளியாகும் அவளுடைய புத்தகத்துக்கு ஒரு பிரபல எழுத்தாளர் மதிப்புரை எழுதியிருக்கிறார்."

"பிரபல எழுத்தாளர்தானே? சிறந்த எழுத்தாளர் யாரும் எழுதவில்லையே?"

"சிறந்த எழுத்தாளராக இல்லையென்றால் பிரபலம் அடைய முடியுமா?"

"சிறந்த எழுத்தாளர்கள் பிரபலமடையும் அளவுக்கு இன்று நம்முடைய வாசகர்களின் தரம் அமையவில்லை. சமீப காலமாக இலக்கியத் தரம் ரொம்பக் குறைந்து போய் விட்டது. இந்தமாதிரி 'பாபுலர்' எழுத்தாளர்களுக்குத்தான் இன்று மார்க்கெட். பாவம், ஸ்டாண்டர்ட் எழுத்தாளர்கள் தமிழ் நாட்டில் பிறந்து விட்டுத் தவிக்கிறார்கள்" என்றான் சம்பத்.

"கோமளத்தின் புத்தகத்துக்கு மதிப்புரை எழுதிக் கொடுத்தவர் தரமான எழுத்தாளரும்கூட."

"யார்?"

நளினி அந்த எழுத்தாளரின் பெயரைச் சொன்னதும், சம்பத், வியப்புடன், "அவர் எப்படி இவளுடைய புத்தகத்துக்கு முகவுரை எழுதினார்?" என்று கேட்டான். பிறகு, "கோமளத்தின் கவர்ச்சிக்காக இரக்கப்பட்டு எழுதிக் கொடுத்திருப்பார்" என்றான்.

"இரக்கப்பட்டா? அல்லது மயங்கியா?" என்று கேட்டு விட்டு நளினி குறும்பாகச் சிரித்தாள்.

அவளுடைய குறும்புத்தனத்தை ரசித்தான் சம்பத். அப்போது பந்தலுக்குள் நீதிபதி நாககந்தரமும், கோமளமும் வரவே, அவர்களுடைய கவனம் அந்தத் திசையில் திரும்பியது.

''மயங்கித்தான் எழுதியிருப்பார்'' என்று நளினியிடம் இரகசியமாகச் சம்பத் சொன்னதும், நளினி சிரித்தாள். ஒய்யாரமாக நடந்து வந்த கோமளத்தின் அழகைப் பொறாமையோடு பார்த்துக் கொண்டிருந்தாள்.

விழாப்பந்தலில் கூடியிருந்த கூட்டத்தைப் பார்த்து நாககந்தரம் பிரமிப்படைந்தார். அவ்வளவு பெரிய கூட்டத்தை அவர் எதிர்பார்க்கவில்லை. கோமளம் எழுதுவதையே விரும்பாத நாககந்தரம், இப்போது தம்முடைய மனைவிக்குக் கிடைத்திருக்கும் புகழை எண்ணி வியந்தார். அவளுடைய 'நியூவேவ்' பாணிக் கதைகள் சிலவற்றைப் படித்துவிட்டு வெறுப்புடன் முகத்தைச் சுளித்திருக்கிறார். வெளியில் பிறர் முன்னிலையில் பேசவே வெட்கப்பட வேண்டிய விஷயங்களைக் கோமளம் சரளமாக எழுதுவதை எண்ணி எண்ணித் தம் முன்னாகவே மனம் கசந்திருக்கிறார். அதுவும் ஒரு பெண்ணால் எப்படி இவ்வளவு அப்பட்டமாக எழுத முடிகிறது என்பது அவருக்குப் புரியவேயில்லை. அவளுடைய எழுத்தில் காணப்படும் அசிங்கங்களைப் போலவேதான் அவளுடைய மனமும் இருக்குமோ என்ற சந்தேகம் எழுந்தபோதெல்லாம் அவளை எழுத விடாமல் தடுக்க வேண்டும் என்னும் ஆவேசம் எழுந்ததுண்டு. ஆனால், அந்த ஆவேசம் எல்லாம் கோமளத்தின் கவர்ச்சியில் ஒரு நொடியில் அவிந்துவிடும்.

ஒருமுறை, பந்தல் முழுதும் பார்வையைச் செலுத்தினார் நாககந்தரம். ஊரில் உள்ள முக்கியமான பிரமுகர்கள் அனைவரும் வந்திருந்தார்கள். அவர்கள் எல்லோரும் உண்மையில் கோமளத்தின் எழுத்தில் ஈடுபாடு கொண்டு வந்தவர்களா அல்லது நீதிபதியின் மனைவி என்ற கௌரவத்துக்காக வந்தவர்களா என்று புரியாமல் குழம்பினார்.

அவருக்கு அடுத்த நாற்காலியில் அமர்ந்திருந்த கருணாகரன், ''தமிழ் நாட்டின் சிறந்த எழுத்தாளர்களில் ஒருவர் உங்கள் மனைவி'' என்றார். நன்றி கலந்த புன்னகையுடன் கருணாகரனைப் பார்த்தார் நாககந்தரம்.



''நீங்கள் கதைகள் படிப்பதுண்டா?'' என்று கேட்டார்.

''கதைகள் அவ்வளவாகப் படிப்பதில்லை. ஆனால் இவர்களுடைய கதைகள் சிலவற்றைப் படித்திருக்கிறேன்'' என்று பொய் சொன்னார், கருணாகரன். பிறகு, ''என் மனைவி, உங்கள் மனைவியின் பரம ரசிகை'' என்றார்.

''ஓ...!'' என்று வியந்தபடியே கருணாகரனுக்கு அடுத்திருந்த மதுரத்தைப் பார்த்தார், நாககந்தரம்.

''நான் ஒன்று விடாமல் படித்திருக்கிறேன்'' என்றாள் மதுரம். ''இன்று இவர்களைப் போல் துணிந்து எழுதும் எழுத்தாளர் தமிழ்நாட்டில் வேறு யாரும் இல்லை என்றே சொல்லலாம்'' என்றாள்.

நாககந்தரம் குறுநகை புரிந்தார். ஏதோ 'நியூவேவ்' என்னும் பெயரில் எதை எழுதினாலும் படிப்பார்கள் போலிருக்கிறது என்று வியந்து கொண்டார். கோமளம் கதைகள் எழுத ஆரம்பித்த புதிதில் அவர் சொன்னவை நினைவில் வந்தன—

'நவரசம்' பத்திரிகையில் வெளியாகியிருந்த கோமளத்தின் கதையை ஒரு நாள் படித்துவிட்டு மிகுந்த அருவருப்போடு முகத்தைச் சுளித்தார்.

''இப்படியெல்லாம் நீ கதை எழுதினால் எனக்குத்தான் கேவலம். ஒரு நீதிபதியினுடைய மனைவி தரக் குறைவாக எழுதுகிறாள் என்று ஊரில் பேசுவார்கள்'' என்றார்.

''ஊரில் இதைத்தானே விரும்பிப் படிக்கிறார்கள்?'' என்றாள் கோமளம்.

''விரும்புகிறார்கள் என்பதால் நீ இப்படி எழுதுவதா? இந்த மாதிரி எழுதுவதற்கென்றே வேறு எத்தனையோ பேர் இருப்பார்களே.''

''எடிட்டர் சந்தானம்தான் நியூவேவ் பாணியில் இருக்க வேண்டும் என்றார். கதையில் உள்ள சில பகுதிகள் நான் எழுதியவையல்ல; எடிட்டர்தான் சேர்த்திருக்கிறார்.''

''பத்திரிகை விற்பதற்காக அவர் என்ன வேண்டுமானாலும் செய்வார். ஆனால் உன்னுடைய கதையில் அசிங்கத்தைப் புகுத்தியிருக்க வேண்டாம்.''

''இன்றையப் பாணியின் தன்மை இப்படித்தான். இப்படி இருந்தால்தான் ரசிக்கிறார்கள். இல்லையென்றால் எனக்கு இவ்வளவு சீக்கிரத்தில் பெயர் வந்திருக்குமா?'' என்று கூறிப் பெருமைப்பட்டுக் கொண்டாள் கோமளம்.

''எழுத்தை இப்படி அம்மணமாக விட்டுவிடக் கூடாது. நிர்வாணம், ஓர் ஆபாசமான காட்சி. சிறிதுநேரம்தான் வெறியூட்டுமே தவிர, வெகுநேரம் பார்த்து ரசிக்க இயலுமா? ஒரு பெண்ணின் அழகு அவள் உடை உடுத்தும் பாணியில்தான் இருக்கிறது. அவளுடைய பெருமையும் அதில்தான். அதேபோல்தான், இலக்கியத்தையும் தகுந்த உடை உடுத்தித்தான் காட்ட வேண்டும். இப்படி நிர்வாணமாக விட்டுவிட்டால், முதலில் ஏதோ பரபரப்பாகத் தோன்றும்; போகப் போக அருவருப்பு ஏற்பட்டு விடும்.''

நாககந்தரம் இப்படிக் கூறியதைக் கோமளம் ஏற்றுக் கொண்டாலும், 'நவரசம்' பத்திரிகை, நியூவேவ் கதைகளையே விரும்பும்

போது அவன் என்ன செய்ய முடியும்? அந்த மாதிரியான கதைகள் அவனுக்கு விளம்பரத்தைக் கொடுத்தபோது பெருமையால் பூரித்துப் போனான்.

இப்போது நாககந்தரம்கூட அந்தப் பந்தலில் நிரம்பி வழிந்த கூட்டத்தைக் கண்டு பூரிக்கத்தான் செய்தார்! தம்முடைய மனைவியின் எழுத்துக்கு அவ்வளவு மதிப்பும் புகழும் இருக்கும் என்றே அவர் நம்பவில்லை.

பந்தலில் அமைக்கப் பட்டிருந்த மேடையைப் பார்த்தார். மேடையில் விழாவுக்குத் தலைமை வகிக்க வந்திருந்த மாவட்டக் கலெக்டர் அமர்ந்திருந்தார். அவருக்கு அடுத்துக் கோமளம் அமர்ந்திருந்தாள். அந்த விழாவில் புத்தகத்தையும், கோமளத்தையும் புகழ்ந்து பேசுவதற்காகச் சில முக்கிய பிரமுகர்களும் வந்திருந்தார்கள்.

அந்த வெளியீட்டு விழாவுக்கு ஏற்பாடு செய்தவர், கோமளத்தின் கதைத் தொகுதியைப் புத்தகமாக அச்சிட்ட 'ரசிகர் பதிப்பக'த்தின் அதிபரான நமச்சிவாயம். வெளியீட்டு விழா நடத்த வேண்டும் என்று யோசனை கூறியவரும் அவரே. அதை ஆமோதித்தார் 'நவரசம்' பத்திரிகையின் ஆசிரியர், சந்தானம். வெளியீட்டு விழா நடத்தினால் கோமளத்தின் புகழ் பரவும் என்பதையும் நல்ல விளம்பரம் கிடைக்கும் என்பதையும் நமச்சிவாயம் விவரித்தபோது கோமளம் மிகுந்த உற்சாகம் அடைந்தாள். "நவரசம் பத்திரிகையில் விழாப் படங்களைப் பிரசுரித்து ஜமாய்த்து விடுகிறேன்" என்று சந்தானம் கூறியதும் கோமளம் பெருமை தாங்காமல் திணறினாள்.

"விழாவுக்கு நிறையச் செலவாகுமே?" என்றாள் கோமளம்.

"செலவை இப்போது நீங்கள் தரவேண்டாம். பின்னால் பார்த்துக் கொள்ளலாம்" என்று நமச்சிவாயம் சொன்னதும் நாககந்தரம் திடுக்கிட்டார்.

"வெளியீட்டு விழாச் செலவை நாங்கள் தான் ஏற்க வேண்டுமா?" என்று கேட்டார்.

நமச்சிவாயம் குழைவாகச் சிரித்தபடி சொன்னார்: "ஹி.... ஹி.... பொதுவாகப் புத்தகங்களுக்கு வெளியீட்டு விழாவே நடத்துவதில்லை. வெளியீட்டு விழாவினால் புத்தகங்





## ஒளிக்கப்பட்ட தேங்காய்!

ஒரிஸ்ஸாவில் ஸ்ரீ பஞ்சமி வந்துவிட்டால் மாணவர்களுக்கெல்லாம் கொண்டாட்டம். சரஸ்வதி தேவியின் வழிபாடாகத் திகழ்கிறது. ஆசிரியர் ஏழெட்டு மாணவ மாணவிகளைத் தேர்ந்தெடுப்பார். எல்லாம் எட்டுவயது, பத்து வயதுக் குழந்தைகள். ஸ்ரீபல் என்று அழைக்கப்படும் தேங்காயைக் குட்டையில் சேற்றில் யாருக்கும் தெரியாமல் புதைத்து விடுவார்கள். குழந்தைகள் சென்று, தேடித் தேங்காயை எடுத்து வர வேண்டும். முதலிலே தேங்காயை எடுக்கும் மாணவனுக்கோ, மாணவிக்கோ அன்று ஏகப்பட்ட பெருமை. - மயிலன்



## மருதாணியிட்டால் ஆபத்து!

ராஜஸ்தானில் 'விஸ்ஸா' என்று ஓர் இனத்தவர் இருக்கிறார்கள். இவ்வினத்தைச் சேர்ந்த பெண்மணிகள் மருதாணி இட்டுக் கொள்வதில்லை. இவ்வினத்து மூதாட்டி ஒருத்தி தன் கணவனுடன் உடன்கட்டை ஏறியதாகவும், அப்பொழுது மருதாணி இட்டுக் கொண்டதாகவும் கூறுகிறார்கள். அவள் உத்தர வின்பேரில் பிகானேரில் ஒரே ஒரு குடும்பம் மட்டும் தான் இன்றும் மருதாணி இட்டுக் கொள்ளுகிறது. இவ்வழக்கத்தை மீறி 'விஸ்ஸா' இனத்து மக்கள் மருதாணி இட்டுக் கொண்டால் கைகளில் பெரிய பெரிய கொப்புளங்கள் ஏற்பட்டு விடுகின்றனவாம். அதனால் என்ன தீங்கு நேருமோ என்ற அச்சத்தில் இம் மக்கள் மருதாணியைத் தவிர்க்கிறார்கள். ரா,வி.

---

களின் விற்பனை தமிழ் நாட்டில் கூடப் போவதுமில்லை. இந்த மாதிரியான விழாவெல்லாம் புத்தக ஆசிரியரின் விளம்பரத்துக்காகத்தான். நாம் வெளியீட்டு விழா நடத்தினால் அம்மாவின் புகழ் பரவும்.''

''செலவு அதிகம் ஆகுமோ?'' — கோமளம் கவலையோடு கேட்டாள்.

''செலவைப் பற்றி என்ன கவலை? நீங்கள் பணம் தரவேண்டாம். முதலில் நானே பணம் போட்டுக் கொள்கிறேன். பிறகு உங்கள் ராயல்டியிலிருந்து சரிக்கட்டிக்கொண்டால் போகிறது.''

''ராயல்டி பணத்தை விட அதிகமாக ஆகுமோ என்னவோ?'' என்று நாககந்தரம் கேட்டார்.

''அதை நான் கவனித்துக் கொள்கிறேன். நீங்கள் கவலையே படவேண்டாம். விழா முடிந்ததும் கணக்கை உங்களிடம் காட்டுகிறேன். ராயல்டி பணத்தை விட அதிகமாகப் போகாதபடி நான் கவனித்துக் கொள்வேன்'' என்று நமச்சிவாயம் தைரியம் சொன்னார்.

ஆனால் நாககந்தரத்துக்குத் திருப்தி ஏற்படவில்லை. நமச்சிவாயம்தரப்போகும்கணக்கு எப்படி இருக்கும் என்று தெரியும். ராயல்டி பணம் முழுவதற்கும், கணக்குக் காட்டிவிடுவார். இனி இந்தப் புத்தகத்திலிருந்து கோமளத்துக்கு ராயல்டியாக ஒரு பைசாக் கூடக் கிடைக்கப் போவதில்லை. இதை நினைத்து வெளியீட்டு விழாவுக்கு ஆட்சேபனை செய்த நாககந்தரம், விழாவினால் கோமளத்துக்குக் கிடைக்கப் போகும் விளம்பரத்தையும், புகழையும் எண்ணி, சம்மதித்தார்.

நமச்சிவாயமும், சந்தானமும் சேர்ந்து முயன்றதால்தான் வெளியீட்டு விழாவுக்கு இவ்வளவு கூட்டம் கூடியது என்பதை நாககந்தரம் புரிந்து கொண்டார். விழாவைப் பற்றி இரண்டு வாரங்களாக 'நவரசம்' பத்திரிகையில் பிரமாதமாக விளம்பரங்கள் வெளியாகி யிருந்தன. கூட்டத்தையும், பந்தல் அலங்காரத்தையும், மேடையில் கோமளம் அமர்ந்திருந்த ஒய்யாரத்தையும் பார்த்து மனம் பூரித்தார் நாககந்தரம்.

பந்தலுக்குள் வந்த ஆவுடையப்ப பிள்ளை, முன் வரிசையிலிருந்த நீதிபதியைப் பார்த்துக் கும்பிட்டார். பிறகு சற்றுத் தள்ளியிருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டார்.

''நான் மிஸ்டர் பிள்ளையிடம் எவ்வளவோ சொன்னேன். பிடிவாதமாக இருக்கிறார்'' என்று கருணாகரன் மெதுவாகக் கூறியதும், நாககந்தரம் ஒன்றும் புரியாமல் கருணாகரனைப் பார்த்தார்.

''அதுதான் வக்கீல் சங்கத்தின் தீர்மானம் பற்றி...'' என்று குழைந்தார் கருணாகரன்.

நாககந்தரம் உடனே புரிந்து கொண்டார். அவருடைய முகத்திலிருந்த மகிழ்ச்சி மறைந்தது. சந்தோஷமான அந்த வேளையில் கருணாகரன் அந்தப் பேச்சை எடுத்தது விரசமாக இருந்தது. இருந்தாலும் விவரம் தெரிந்து கொள்ளும் ஆசையில் நாககந்தரம் பேசினார்.

''என்ன தீர்மானம்?'' — தெரியாதவரைப் போல் நடித்தார் நீதிபதி.

கருணாகரன் ஒரு குழைச் சிரிப்பை உதிர்த்தார். ''உங்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நினைத்தேன். வக்கீல் சங்கத்துக்கு வேறு வேலை என்ன? உங்கள்மீது சிலருக்குக் கோபம், வேறென்ன...'' என்றார்.

''என்ன தீர்மானமோ?'' என்று அலட்சியமாகக் கேட்டார், நீதிபதி.

தீர்மானங்களைப் பற்றி விவரிக்கக் கருணாகரன் விரும்பவில்லை. ''முழு விவரமும் நான் பார்க்கவில்லை. மிஸ்டர் பிள்ளைதான் தீவிரமாக முயற்சி செய்கிறார்'' என்றார்.

நாககந்தரம் சற்றுத் தள்ளி அமர்ந்திருந்த ஆவுடையப்ப பிள்ளையைப் பார்த்தார். பிள்ளையின் மீது அவருக்குக் கடும் கோபம் எழுந்தது. பெருந்தன்மையானவர் என்று தாம் நம்பிய ஆவுடையப்ப பிள்ளை தமக்கு எதிராகத் தீர்மானம் போட முயல்கிறார் என்பதை எண்ணிப் பொருமினார்.

''ஓஹோ...'' என்று அலட்சியமாக முனகிவிட்டு, அதைப் பற்றித் தாம் அக்கறை கொள்ளவில்லை என்னும் பாவனையில் பார்வையை வேறு திசையில் செலுத்தினார்.

நீதிபதியிடம் தாம் சொல்ல நினைத்ததைச் சொல்லியாகி விட்டது என்று திருப்தியடைந்தார் கருணாகரன். (தொடரும்)

கம்ப்யூட்டரை மிஞ்சும் ஸிஸிஎம்



# நியூ மிர்ராபோ

## சித்திரக் கோலத்திலே சிங்காரப் புதுமை!

இன்று கம்ப்யூட்டர் அளிக்கும் சித்திரக் கோலங்கள். வியப்பூட்டும் புதுமைகள். கற்பனையைக் கடக்கும் எழில் படைப்புகள். ஸிஸிஎம் நியூ மிர்ரபோ ஃபுல் வாயில் புடவைகளும் அப்படியே. மெல்லிடையாள் மனங்கவரும் புதையல்கள். உயர்தர எகிப்திய பருத்தியில் தயாரிக்கப்பட்டவை. 'ஆன்டிகிரஸ்' செய்யப்பட்டவை. இதற்கு ஏற்ற ஃபுல் வாயில் சோளித்துணிகள்.

இதர படைப்புகள்:
எலிகன்ஸா சூட்டிங் • லஸ்லின் ஷர்ட்டிங்
• ஸ்ட்ரேஞ்சர் ஷர்ட்டிங்
• ஸில்வர் கிங் வேஷ்டி • மல்
• கேஸ்மென்ட் துணிகள்.



ஸிஸிஎம் அளிப்பது வண்ணப் புதையல்கள்



தி கோயம்பத்தூர்
காட்டன் மில்ஸ் லிமிடெட்

ADWAVE-CCM-185




## வாட்டம் தீர்த்த பொட்டு

இரண்டு ஆண்டுகளுக்கு முன் நான் திருமணமாகி பம்பாய் வந்த புதிதில் என் கணவர் என்னைத் தன் மராட்டிய நண்பரின் இல்லத்துக்கு அழைத்துச் சென்றார். பேசி முடித்து விடைபெறும்போது நண்பரின் மனைவி ஒரு தட்டில் குங்குமச் சிமிழைக் கொணர்ந்து நம் வழக்கம்போல் முன்னே நீட்டாமல், தாமே என் நெற்றியில் பொட்டை வைத்தார். நானும் உடனே புறப்பட்டு விட்டேன். அப்போது அந்த அம்மையாரின் முகம் இலேசாக வாட்டமுறுவதைக் கவனித்தேன்.



என் கணவரை நோக்கி, 'ஏன் அவள் முகம் இப்படி மாறியது?' என்று கேட்டேன். அதற்கு அவர், ''மராட்டியர்கள் வழக்கப்படி ஒரு சுமங்கலி மற்றொரு சுமங்கலிக்குப் பொட்டிட்டால் இரண்டாமவர் பதில் பொட்டு வைக்க வேண்டும். அதை அவர்கள் மங்களமாகக் கருதுகிறார்கள்.'' என்றார். உடனேயே அதைச் செயலில் காண்பித்து அந்த இல்லத்தரசியை மகிழ்வித்தேன். இந்த மங்கலச் செயலுக்கு மராட்டியர்கள் ரொம்ப முக்கியத்துவம் கொடுக்கிறார்கள்.—பம்பாய் எஸ்.ராதா

## குறை தீர்த்த தீபாவளி

எனக்குக் கல்யாணமான புதிதில் வட கனராவைச் சேர்ந்த கார்வார் என்னும் ஊரில் எனது கணவர் ஒரு ஷிப்பிங் மானேஜராக வேலை பார்த்து வந்தார்.

அங்கு உள்ள பெரும்பாலான மக்கள் கொங்கனிக்காரர்களும், மராட்டியர்களும் ஆவர். அவர்கள் தீபாவளியை மூன்று நாட்களுக்குக் கொண்டாடுகிறார்கள். முதல் நாள் காலை (தீபாவளி அன்று) அவரவர் வீட்டு வாசலில் விதம் விதமான ரங்கோலி போடுகிறார்கள். வீட்டிலிருக்கும் தலைவனும் அவர்களுடைய பிள்ளைகளும் ஸ்நானம் செய்துவிட்டுக் கையில் கோவைக்காய் போன்ற (கசப்பான ஒரு வகைக் காய்) காயை எடுத்து வந்து ரங்கோலியின் மீது வைத்து அதை இரண்டு கால்களாலும் நசுக்கி அதை இலேசாக வாயில் வைத்துக் கொள்கிறார்கள். (அதாவது நரகாசுரனை வதம் செய்வதாகச் சொல்கிறார்கள்.) பிறகு வீட்டின் தலைவி அவர்களுக்கு ஆரத்தி எடுத்துத் திருஷ்டி கழிக்கிறாள். அவளுக்கு அவ்வீட்டின் தலைவன் புடவையோ, அல்லது பணமோ, நகையோ பரிசாக அளிக்கிறான். மறு நாள் அண்ணன்மார்கள் அக்காள் தங்கைகளுக்குப் பல வெகுமதிகள் அளிக்கிறார்கள். மூன்றாவது நாள் அக்காள் தங்கை, அண்ணன் தம்பி மனைவிமார்களுக்குப் புடவையோ பணமோ அவரவர் சக்திக்கேற்பப் பரிசுகளாக அளிக்கிறார்கள்.



எனது கணவரின் நெருங்கிய நண்பர் ஒருவர் மராட்டியர். அவர் எங்களைத் தீபாவளிக்குத் தம் வீட்டுக்கு அழைத்திருந்தார். நாங்கள் மெதுவாகப் போகலாம் என்றிருந்தோம். காலை ஆறு மணிக்கெல்லாம் அவர் வந்து எங்களை அழைத்துச் சென்றார். அவர்கள் வீட்டில் பெரிய ரங்கோலி போட்டு அதன் மேல் இரண்டு மனைகளைப் போட்டு அதில் தம்பதி சமேதராய் எங்களை அமரச் சொல்லி இரண்டு பெரிய தட்டுக்களில் பலவிதத் தின்பண்டங்களைக் கொடுத்துச் சாப்பிடச் சொல்லி நாங்கள் சாப்பிட்ட பிறகே அவர்கள் பட்சணங்களைச் சாப்பிட்டார்கள். புதிதாக மணமானவர்களைத் தீபாவளி அன்று அவர்கள் அப்படிச் செய்யச் சொல்வார்களாம். அன்று மாலை எல்லாக் கடைகளிலும் லக்ஷ்மி பூஜை செய்து எல்லோருக்கும் இனிப்புக்கள் வழங்கினார்கள். ஐந்து நாட்களுக்கு வீடுகளில் எல்லாம் தீபாலங்காரம் செய்கிறார்கள்.

எங்கள் தலை தீபாவளி வெகு அமோகமாக நடைபெற்றது. நாங்கள் எங்கள் பெற்றோருடன் இல்லாத குறையை எனது கணவரின் மராட்டிய நண்பரும் அவரது குடும்பத்தினரும் தீர்த்து வைத்தார்கள்.

பெங்களூர் — பேபி சேகர்

## பண்பு கற்பித்த கேராவ்

ரகுராமன் கல்கத்தாவில் ஒரு பெரிய தொழிற்சாலையில் இன்ஜினியராகப் பணியாற்றி வந்தார். 120 தொழிலாளர்கள் கொண்ட பகுதிக்கு அவர் அதிகாரி. அவர் உணர்வில் தமிழர். அறிவில் ராமகிருஷ்ணர் தாசர்.

எல்லாத் தொழிலாளர்களும் அவருடைய அன்பில் இணைந்தவர்கள். ஒரு நாள் காலையில் தொழிற்சாலையில் ஒரே பரபரப்பு. ரகுராமனுக்கு ஒன்றும் புரியவில்லை.

அவர் வாழ்க்கையில் ஒரு புதிய அனுபவம். 'கேராவ்' என்றால் என்ன என்று அனுபவ பூர்வமாக அறிந்தார். எட்டு மணிக்குச் சீட்டில் உட்கார்ந்தவர். ஆயிரக் கணக்கான தொழிலாளர்கள் முற்றுகையிட்டிருந்தார்கள். சாப்பாடு வரவில்லை, டிபன் வரவில்லை. மணி ஓடிக்கொண்டே இருந்தது. வெளியிலும் போக முடியாமல் கேட்டை அடைத்து விட்டார்கள்.

ரகுராமன் தமது நாற்காலியை விட்டு நகரவில்லை. பொறுமையாக இருந்தார்.

மறுநாள் காலை பத்து மணிக்குத் தொழிலாளர் குழுவைச் சேர்ந்த நான்கு வங்காளிகள் ரகுராமனின் அறைக்கு வந்தார்கள்.

''சார்! இரண்டு விஸ்டம்கள் மோதும்போது சிரமமாகத்தான் இருக்கும். தயவு செய்து பொறுத்துக் கொள்ளுங்கள்!'' என்றார்கள்.

''நான் ஒன்றும் சொல்லவில்லையே? பேசாமல் நாற்காலியில்தானே உட்கார்ந்திருக்கிறேன்?'' என்றார் ரகுராமன்.

''அதற்கில்லை ஸார். நீங்கள் மதராஸி. பண்பு தெரிந்தவர். உங்களைக் கஷ்டத்துக்கு உள்ளாக்க எங்களுக்கு மனம் வரவில்லை. ஆனாலும், முதலாளித்துவமும் தொழிலாளித்துவமும் மோதும்போது கஷ்டங்களைப் பொருட்படுத்தக் கூடாது. இருந்தாலும் இருபத்து நான்கு மணி நேரமாக நீங்கள் நாற்காலியில் உட்கார்ந்திருப்பதைப் பார்க்க எங்களுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது.''

''நான் மட்டுமா உட்கார்ந்திருக்கிறேன்? நாம் எல்லோரும்தானே உட்கார்ந்திருக்கிறோம்!'' என்றார் ரகுராமன்.

''உங்கள் வீட்டுக்குச் செய்தி அனுப்பவில்லையே! கவலைப்பட மாட்டார்களா?''

''அந்தக் கவலை உங்களுக்கு எதற்கு?''

''ஸார், எத்தனை நேரம்தான் பட்டினி கிடப்பீர்கள்? உங்களுக்கு லூச்சியும் ஸப்ஜியும்



கொண்டு வந்திருக்கிறோம். சாப்பிடுங்கள்!'' என்றார் ஒருவர்.

''மன்னிக்கணும்'' என்றார் ரகுராமன்.

''விருந்தோம்பலில் வங்காளம் சென்னைக்குச் சளைக்காது சார். நீங்கள் இருபத்தி நாலு மணி நேரமாகச் சாப்பிடவில்லை. உட்கார்ந்தே இருக்கிறீர்கள். அதுமட்டுமல்ல. இரவு பன்னிரண்டு மணிக்குப் பத்து நிமிடங்கள் கேட்டைத் திறந்து வைத்திருந்தோம். எத்தனையோ ஆசாமிகள் நழுவி விட்டார்கள். நீங்கள் மட்டும் நழுவவில்லை. சாப்பிடவுமில்லை. எங்களுக்காக நீங்கள் சாப்பிட்டுத்தான் ஆகவேண்டும்'' என்றார் வேறு ஒருவர்.

''அது சரி, இதை யெல்லாம் நீங்கள் எப்படிக் கொண்டு வந்தீர்கள்?''

''அதைப் பற்றிக் கேட்காதீர்கள். தலைவர்கள் 'கெராவ்' செய்யச் சொல்லுகிறார்கள். நாங்கள் செய்கிறோம். நீங்கள் சாப்பிடுங்கள்.''

''விஸ்டம் என்றால் அதற்கு மதிப்புக் கொடுக்க வேண்டும். நீங்கள் சாப்பாட்டை உள்ளே கொண்டு வந்து விஸ்டத்துக்கு மாசு கற்பித்து விட்டீர்கள். அதே மாதிரி அதிகாரிகளும் தருணம் பார்த்து நழுவித் தங்களுக்கு மாசு கற்பித்துக் கொண்டார்கள். ஆனால் நான் இப்பொழுது விஸ்டத்தைப் பற்றிப் பேசவில்லை. விருந்தோம்பலைப் பற்றிப் பேச



கிறேன். அதிகாரிகளுக்கும் மற்றவர்களுக்கும் உணவு கொடுத்தால் நான் சாப்பிடத் தயார்!'' என்றார் ரகுராமன்.

ஒரு மணிக்கெல்லாம் கூடை நிறைய லூச்சியும், ஸப்ஜியுமாக வந்தன. வங்காளிகள் ரகுராமனையே எல்லோருக்கும் விநியோகம் செய்யச் சொன்னார்கள். ரகுராமனின் நல்லகுணத்தால் இறுக்க நிலை தளர்ந்தது.

ரகுராமன் உணவு அருந்தும்போது, பவதாரிணியின் பிரசாதமாகவே சாப்பிட்டார்.

வங்காளம் அழியவில்லை. எப்போதும்போல் வங்காளம் செழிக்கிறது. வங்காளம் பலவிதமான அரசியல் கட்சிகளினால் சின்னா பின்னமாவது போலத் தெரிந்தாலும் வங்காளிகளின் அடி மனத்தில் இன்னும் ''ஸோனார் பாங்களா''தான்.

**கல்கத்தா — கே. ஆர். வேங்கடரமணன்**

## லால்வாணிகள் நால்வர்

நாங்கள் சுமார் மூன்று வருடங்கள் பம்பாயில் இருந்தோம். என் கணவருக்கு டெலிபோன்ஸின் அஸிஸ்டெண்ட் என்ஜினீயர் வேலையாதலால் மூன்று அல்லது நான்கு வருடங்களுக்கு ஒருமுறை மாற்றல் ஆகும். நாங்கள் அங்கு குடியிருந்த பகுதியில் ஸிந்திக்காரர்கள்தான் அதிகம். அவர்கள் பழகுவதற்கு மிகவும் நல்லவர்கள். அவர்களுடைய பழக்க வழக்கங்கள் எல்லாமே வேறுதான். எப்போதும் அதிகமாகத் தித்திப்புத்தான் சாப்பிடுவார்கள். உடை விஷயங்களில் அதிகமாகப் பணச் செலவு செய்வார்கள். இட்டிலி, தோசைகளை விரும்பிச் சாப்பிடுவார்கள். எப்படிக் கஷ்டப்பட்டு அரைக்கிறீர்கள் என்று வியப்பார்கள். காரம் சாப்பிட்டால் நாக்குப் புண்ணாகிவிடாதா என்று கேட்பார்கள். தினமும் அலுக்காமல் சாம்பார் சாப்பிடுகிறீர்களே என்று பரிகாசம் செய்வார்கள்.

அங்கு நாங்கள் இருந்தபொழுது ஒரு வேடிக்கையான சம்பவம் நடந்தது. எங்கள் வீட்டில் போன் உண்டு. ஆதலால் அந்தக் காலனி மக்கள் எல்லோருமே போன் செய்ய வருவார்கள். அநேகமாகச் சிந்திக்கார ஆண்களின் பெயர்கள் லால்வாணி, மோட்வாணி என்றுதான் இருக்கும். ஒரு நாள் எங்களுக்கு லால்வாணியைக் கூப்பிட வேண்டும் என்று போன் வந்தது. நாங்கள் மிகவும் பழகிக்கொண்டிருந்த அடுத்த வீட்டுக்காரரின் பெயர் லால்வாணிதான். அவரைக் கூப்பிட்டவுடன் அவர் வந்து பேசிவிட்டுத் தனக்கு இல்லை யென்று கூறி, எட்டாம் நம்பரில் இருக்கும் லால்வாணியைக் கூப்பிட்டார். (இவர் இருப்பது இரண்டாவது மாடி) அவர் வந்துவிட்டு இருபத்திநாலாம் நம்பரில் இருப்பவருக்கு என்று சொல்லி, அவரை வரச் சொன்னார். அவர் வந்து அடுத்த கட்டிடத்தில் (முதலாவது மாடி) நாலாம் நம்பர் லால்வாணியை வரச் சொன்னார். இப்படி நான்கு லால்வாணிகளும் வந்துவிட்டுப் போனபின் முக்கால் மணி நேரம் கழித்து 'ராங் நம்பர்' என்று சொல்லி நாங்கள் போனை வைத்து விட்டோம்!

திருவனந்தபுரம் — மங்களம் மகாதேவன்



# நாலா திசையிலிருந்தும் நாடோடிக் கதைகள்

## ராஜஸ்தான்

அந்தப் பையனுக்குத் தந்தை யில்லை; தாய் தான். தாய் சிரமப்பட்டு ஆளாக்கி அவனைச் சம்பாதித்து வர அனுப்பினாள். அன்னையின் ஆணைப்படி புறப்பட்டவன் ஒரு குளக்கரையிலே லக்ஷ்மி தேவியும் மகா விஷ்ணுவும் சொக்கட்டான் ஆடிக்கொண்டு அமர்ந்திருப்பதைக் கண்டான். அருகில் அமர்ந்து வேடிக்கை பார்க்கலானான். விளையாட்டு முடிந்ததும் விஷ்ணுபகவான், பையனைப் பார்த்து, "ஆட்டத்தில் யார் ஜெயித்தார்கள், யார் தோற்றார்கள், சொல்லு!" என்றார்.

"வெற்றி லக்ஷ்மிக்குத்தான்!" என்று 'டக்'கென்று பதில் சொன்னான் பையன்.



லக்ஷ்மி தேவி மகிழ்ந்து போய் அவனுக்குத் தன் மோதிரத்தையே கழற்றிக் கொடுத்தாள்.

அதைப் பெற்றுக்கொண்டு வீடு திரும்பிய பையனை வழியில் ஒரு திருடன் சந்தித்தான். ஒரு தடவை பார்த்துவிட்டுத் தருவதாக மோதிரத்தை வாங்கிக் கொண்டு, பையனுக்குக் கடுக்காய் கொடுத்துவிட்டு எங்கோ ஓடி மறைந்தான் திருடன்.

பையனுக்கு வருத்தம்தான் என்றாலும் அதைக் காட்டிக்கொள்ளாமல் மறுநாளும் சம்பாதித்து வரப் புறப்பட்டான். அதே மரத்தடியில் விஷ்ணுவும் லக்ஷ்மியும் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருந்தார்கள். இந்தத் தடவையும் விஷ்ணு அதே கேள்வியைக் கேட்டார். பையனும் அதே பதிலைச் சொன்னான். லக்ஷ்மிக்கு எல்லையற்ற மகிழ்ச்சி. விலைமதிப்பற்ற முத்துமாலை ஒன்றைப் பரிசாக அளித்தாள்.

அதை எடுத்துக்கொண்டு வீடு திரும்பியவனுக்கு வழியில் முதல் நாள் நேர்ந்த கதியே நேர்ந்தது. திருடன் முத்து மாலையைப் பறித்துக் கொண்டு போய்விட்டான்.

சோர்ந்துபோன பையன் அன்னையிடம் போய் நடந்த விஷயத்தை நடந்தபடியே கூறினான். அவள் சொன்னாள்: "இரண்டு நாட்களும் நீ தவறு செய்து விட்டாய். நாளை நான் சொல்கிறபடி செய்!" என்றாள்.

மூன்றாம் நாள் வந்த பையனை விஷ்ணு பகவான் கேட்டார், யாருக்கு வெற்றி என்று! "தங்களுக்குத் தான்!" என்றான் அவன். "தவறாகச் சொல்கிறாய், குழந்தாய்!" என்றார் விஷ்ணு பகவான்.

"இல்லை, சென்ற இரண்டு நாட்கள்தான் தவறாகச் சொன்னேன். இன்றும் தவறு இழைக்க மாட்டேன்! திருடனாக வந்து தட்டிப் பறித்துச் சென்றது..."

"தாங்கள்தான்!" என்று அவன் குட்டை உடைத்து விடாமல் இருக்க வேண்டுமே என்று விஷ்ணு பகவான், அவனைத் தனியாக அழைத்துக்கொண்டு போய், வேண்டியதைக் கொடுத்தார். விஷ்ணு பகவானின் பொல்லாத்தனத்தை உணர்ந்த லக்ஷ்மியும், பையனின் கெட்டிக்காரத்தனத்தில் மெச்சி, அவனுக்கு லக்ஷ்மி கடாட்சம் பெருகச் செய்தாள்.

## கட்வால்

பேச்சை வளர்ப்பதும், மோரை நீர் ஊற்றிப் பெருக்குவதும் பெண்களுக்குக் கைவந்த கலை.

ஒருத்தி அப்படித்தான் ஆய்ந்து ஓய்ந்து வீடு திரும்பும் தன் கணவனிடம், அவன் வாழ்க்கையில் அன்று நடந்ததைத் தோண்டித் தோண்டிக் கேட்பாள். மறுநாள் நீர்த் துறைக்குப் போகும்போது தன் தோழிகளிடம் ஒன்றுக்குப் பத்தாகக் கூட்டிச் சொல்வாள். அது கணவனின் காதுகளில் விழும் போது சிரமமாக இருக்கும். அவளது இந்தப் பழக்கத்தை எப்படிப் போக்குவது என்று தெரியாமல் திண்டாடினான் அவன்.

ஒரு நாள் ஒரு பெரிய பெட்டியுடன் வீட்டுக்குள் நுழைந்தவனை, அதில் என்ன இருக்கிறது என்று கேட்டாள். அவன் கூற மறுக்கவே, அவள் பிடிவாதம் அதிகமாயிற்று. "யாருக்கும் சொல்லக் கூடிய விஷயம் இல்லை. இருந்தாலும் உனக்கு மட்டும் காதோடு சொல்லி வைக்கிறேன்!" என்றான் கணவன்.

அவன் சொன்னதைக் கேட்டவள், வாயைத் திறக்கக் கூடாது என்று எத்தனையோ தன்னை அடக்கிக் கொண்டாள். ஆயினும் தனது அந்தரங்கத் தோழியை மறுநாள் தண்ணீர்த் துறையில் சந்தித்தபோது, 'யாரிடமும் கூறாதே!' என்று எச்சரிக்கை விடுத்துக் காதோடு காதாகச் சொல்லி வைத்தாள்.

அவள் தோழியால் அதை ஜீரணிக்க முடியவில்லை. வீடு வந்ததும் தன் கணவனுக்கு மட்டும் சொல்லி வைத்தாள். இப்படியாக அவள் சொன்னவிஷயம் சந்தி சிரிக்கலாயிற்று;

அவள் கணவன் அடுத்த ஊர்ப் பெருந்தனக்காரர் ஒருவரைக் கொன்று பெட்டியில் மூடிப்



பணத்தோடு தன் வீட்டுக்கு எடுத்து வந்திருக்கிறான் என்பதுதான் அந்தச் செய்தி.

அரசனின் காதுக்கு அந்தச் செய்தி எட்டவே, அவள் கணவனை உடனே சிறைப்படுத்தி வர உத்தரவிட்டான். காவல் துறையினரைக் கண்டவள் கதிகலங்கி ஒப்பாரி வைக்கத் தொடங்கி விட்டாள்.

"இனி அழுது என்ன பயன்? பிறரிடம் சொல்லாதே என்று உன் காதோடு சொல்லி வைத்த விஷயத்தை இப்படி ஊரறியச்செய்து விட்டாயே! படு, நன்றாக அவஸ்தைப்படு!" என்று கூறிவிட்டுக் காவல் துறையினருடன் அரச அவைக்குச் சென்றான் அவள் கணவன். அவன் முகத்தில் துளிக்கூடக் கலக்கம் இல்லை. மகிழ்ச்சியே தாண்டவமாடியது.

அரசனுக்கு ஆத்திரம், செய்கிற காரியத்தையும் செய்துவிட்டுச் சந்தோஷம் ஒருகேடா என்று!

"அரசே! பெண்களின் வயிற்றில் எந்த ரகசியமும் தரிப்பதில்லை. எத்தனையோ கூறியும் கேளாத என் மனைவிக்குப் புத்தி புகட்ட விரும்பி அப்படிக் கூறினேனே ஒழிய நான் தவறு ஏதும் செய்யவில்லை. வேண்டுமானால் அந்தப் பெட்டியையே சோதனை போட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள்!" என்றான்.

அவன் சொன்னது உண்மையாக இருக்கவே, அவனை விடுதலை செய்து விட்டான் அரசன். ஆனால் தன் அரசியிடம் படிந்துள்ள இதே சுபாவத்தை எப்படிப் போக்குவது என்று தலையைப் பிடித்துக் கொண்டான்.

## குஜராத்

குஜராத்தில் சம்பானேர் என்னும் கோட்டையை மகம்மது ஷா பேகடா என்பவன் ஆண்டு வந்தான். அவன் அவையில் வியாஸ் என்று ஓர் அந்தணன் இருந்தான். மன்னனுக்கு அவனிடம் அபாரப் பிரியம். அதைக் காணப் பொறுக்காத மற்ற அவையோர்கள், "விடியற்காலையில் அந்தணனின் முகத்தில் விழிப்பவர்கள் நரகத்துக்குப் போவார்கள். எனவே, வியாஸை வெளியேற்றிவிடுங்கள்!" என்றார்கள்.



மனம் இல்லை என்றாலும் மாறு சொல்லாமல் மன்னன் வியாஸைக் கடி ரோமம் என்ற ஊருக்கு அனுப்பி வைத்தான். அவன் போனபின் மன்னனுக்குப் பொழுதே போகவில்லை. பொறாமையால்தான் அவையோர்கள் அப்படிச் சொல்லியிருக்கிறார்கள் என்று தீர்மானித்தான். அவையோர்களை அடக்கி வியாஸை மீண்டும் அழைத்து வந்து விடுவது என்று திட்டமிட்டு நான்கு கேள்விகள் கேட்டான்: "அனைத்துக்கும் வித்து எது? அனைத்துக்கும் சுவை கூட்டுவது எது? நன்றி உணர்வு, நன்றிகெட்ட தன்மை என்றால் என்ன?"

அவையில் உள்ள முல்லாக்களால் பதில் கூற முடியாமற்போகவே வியாஸை வரவழைத்தான். அதே கேள்விகளைக் கேட்டான். நீர், உப்பு, நாய், புது மாப்பிள்ளை ஆகியவற்றோடு வந்தான் வியாஸ்.

"என்ன கேலியா செய்கிறாய்?" என்று மன்னன் கடிந்தான்.

"இல்லை அரசே! அனைத்துக்கும் வித்து நீர்! நீரின் உதவியின்றி ஒரு விதையும் முளைப்பதில்லை. உயிரினமும் வாழ்வதில்லை. 'உப்பு இல்லாப் பண்டம் குப்பையிலே' என்று வேறு சொல்லுவார்களே, தெரியுமா? எந்தச் சுவையையும் தூக்கிக் காட்டுவது உப்பு! அதனால் எல்லாச் சுவைகளுக்கும் ஆதாரச் சுவை உப்பு என்று கூறலாம். நன்றி உணர்வுக்கு நாயைக் காட்டிலும் நல்ல உதாரணம் காட்ட முடியாது. ஒருவன் விட்டெறியும் எச்சிற் கலத்தைத் தின்றாலும், அது அவனிடம் எவ்வளவு நன்றி விசுவாசம் பாராட்டுகிறது? மாப்பிள்ளைகள் கோபித்துக் கொள்ளக் கூடாது. நன்றி கெட்டவர்கள் இந்த மாப்பிள்ளைகள்தாம். கண்ணைப் போன்ற பெண்ணையும் கொடுத்துச் சீர் வரிசைகள் பல செய்தாலும் அவர்களுக்குத் திருப்தி ஏற்படுவதில்லை. கன்யா ராசியில் பத்தாம் இடத்தில் உட்கார்ந்துகொண்டு ஒரு நிமிடம் மகிழ்வதும் மறு நிமிடம் கோபிப்பதுமாக இருக்கிறார்களே, இவர்களைக் காட்டிலும் நன்றி கெட்ட ஜன்மம் உண்டா?" என்று கேட்டான் வியாஸ்.

"நானே நரகத்துக்குப் பயந்து இன்றைய மகிழ்ச்சியை என்னால் துறக்க முடியாது!" என்று கூறி, முன்னைக் காட்டிலும் ஒரு படி மேலான மதிப்புடன் அவனைத் தன்னிடமே வைத்துக் கொண்டான் மகம்மது ஷா பேகடா.

## தமிழ்நாடு

"கங்கையில் நீராடுவதனால் பாவங்கள் தொலைகின்றன. காசியில் வசிப்பதனால் முக்தி கிடைக்கிறது என்கிறார்களே! உங்களுக்கு இதில் நம்பிக்கை உண்டா?" என்று கேட்டாள் பார்வதி தேவி.

"உண்டு. இதில் உனக்குச் சந்தேகம் எழக் காரணம்....?" பரமசிவன் கேட்டார்.

"இத்தனை மக்கள் அன்றாடம் நீராடுகிறார்களே! இவர்களுக்கெல்லாமே மோட்சம் கிடைக்கும் என்றால் மோட்ச லோகத்தில் இடம் வேண்டாமா?"

"நீராடுபவர்கள் அனைவருக்குமே மோட்சம் என்றால், நரகமாகிவிடும் மோட்ச லோகம். நீராடுபவர்களுக்கு நம்பிக்கையிருந்தால்தான் இந்த விதி பொருந்தும்!" என்றார் பரமசிவன்.

"அவர்கள் நம்பிக்கை உள்ளவர்களா, இல்லையா என்பது எப்படித் தெரியும்?"

"வா, காட்டுகிறேன்" என்று கூறிய பரமசிவன் வயது முதிர்ந்த கிழவர் வேடம் பூண்டார்; பார்வதியைப் பாட்டி வேடம் பூண வைத்தார்.

ஸ்நான கட்டத்துக்குச் சென்றவர், கால் தடுமாறவே, நீரில் விழுந்து விட்டார். வெள்



னம் அவரை அடித்துக் கொண்டு போக லாயிற்று.

"கிழவரைக் காப்பாற்றுங்கள்!" என்று பார்வதி கூச்சலிட்டாள். பலர் ஓடினர், காப்பாற்ற. ஆனால் கிழவி அவர்களைத் தடுத்து, "யார் பாவமே செய்யவில்லையோ, அவர்தான் கிழவரைத் தொடலாம். பாவிகள் தொட்டால் அவர் நீரில் மூழ்கிவிடுவார். தொட்டவர்களும்கூட மூழ்கிவிடக் கூடும்!" என்றாள்.

ஓடினவர்கள் எல்லோரும் நின்று விட்டார்கள். தங்கள் மனத்தைத் தாங்களே தொட்டுப் பார்த்துக் கொண்டார்கள். ஏதாவது பாவம் செய்திருந்து, ஆறு தங்களையும் அடித்துக் கொண்டு போய் விட்டால்?—மோட்சம் விரும்பிகளின் மனம் இப்படிச் செயல்படவே செயலற்று நின்று விட்டனர்.

அப்பொழுது ஓர் இளைஞன் அங்குவந்தான். அவன் முகத்தில் சரியான அசட்டுக் களை தாண்டவமாடிக் கொண்டிருந்தது. விவரம் கேட்டறிந்தவன் சட்டென்று கங்கையில் குதித்தான். "பாட்டி! கவலைப்படாதே! கங்கையில் குளித்தால் பாவங்கள் கரைந்து விடுகின்றனவாம். நான் குளித்து விட்டேன். என் பாவங்கள் தொலைந்து விட்டன. உங்கள் கணவரைப் போய் மீட்டு வந்து விடுகிறேன்" என்று இரட்டைக் கை நீச்சல் போட்டுக் கிழவரை அணுகிக் கரையும் சேர்த்தான்.

கிழவி பொருள் பொதியச் சிரித்தாள். பார்வதி—பரமேசுவரனாக உருமாறிய பின், "மோட்ச லோகத்தில் அவ்வளவு கலபமாக மக்கட் பெருக்கம் ஏற்பட்டு விடாது என்று நம்புகிறேன்" என்றாள் பார்வதி.

"கற்றி வளைப்பானேன்? மண்ணுலகத்தில் மக்கட் பெருக்கத்தைத் தடுக்க முடியாது என்று கூறிவிட்டுப் போவேன்!" என்றார் பரமசிவன் விஷமமாக.

## காஷ்மீர்

ஆதிகாலத்தில் காதலுக்குக் கண் உண்டு; அழகுக்கு வாய் உண்டு. இரண்டுமே இணைபிரியாத நண்பர்கள். காதல் அழகைப் பார்த்துப் பிரமித்து ரசிக்கும். அழகோ காதலின் குணத்தை மெச்சி மகிழும். ஒருநாள் இரண்டும் வான வீதியில் உலவிக்கொண்டிருந்தன.

அப்பொழுது பௌர்ணமிச் சந்திரன் உதயமானான். காதலின் கண்கள் சந்திரனில் லேசித்தன; அதன் அழகைக் கண்டு வியந்தன.

அழகுக்குப் பொறாமையாகி விட்டது. இத்தனை நாளும் தன்னைப் பருகிக்கொண்டிருந்த காதல் சந்திரனைக் கண்டு மனத்தைப் பறிகொடுப்பதாவது என்று!

'வாய் உள்ள பிள்ளை பிழைக்கும்' என்ற பழமொழியை நம்பித் தன் அழகைத் தானே புகழ்ந்து கொண்டது; சந்திரனை மட்டம் தட்டிப் பேசியது.

காதலுக்கும் பெருங் கோபம் வந்து விட்டது. 'எது அழகோ, அதை நான் ரசிப்பேன். தடுக்க நீ



யார்?' என்றது. வாய்ச் சண்டையாகத் தொடங்கி கைகலப்பில் போய் முடிந்தது. அழகு ஆத்திரத்தில் காதலின் கண்களை நோண்டிவிட்டது. சந்திரனை ரசிப்பதாவது என்று! 'கண் இருந்தால்தானே நீ பிற அழகுகளை ரசிப்பாய்? கண் போன பின் என்ன செய்வாய்?' என்று கேட்டது.

'இந்த நாக்கு இருப்பதால்தானே நீ பேசுகிறாய்? உன்னைப் பற்றியே பெருமை அடித்துக் கொள்ளுகிறாய்?' என்று அழகின் நாக்கைப் பிடுங்கி வெளியே போட்டுவிட்டது காதல்.

அன்று முதல் காதல் குருடாகி விட்டது; அழகு ஊமையாகி விட்டது. இரண்டுக்கும் இடையே பகைமை உணர்வு இன்றும் தொடர்வதற்கு இதுவே காரணம். தொகுப்பு: அக்ஷயம்




பொழுதுபோக்குக்காகச் சிலர் ஸ்டாம்பு சேகரிப்பார்கள். வேறு சிலர் ஓவியம் வரைவார்கள். இப்படி ஒவ்வொருவருக்கும் ஒரு 'ஹாபி' இருப்பது இயல்பு. உங்களிடம் அல்லது உங்கள் நண்பர்களிடம் விநோதமான ஹாபி ஏதாவது இருக்கிறதா? 'பொழுது போக்கு' என்று ஆரம்பித்துப் பின்னர் அதுவே சிலருக்குப் பயன் தருவதாக அமைந்துவிடும். அப்படி யாரையேனும் நீங்கள் அறிவீர்களா? இவை பற்றிச் சுருக்கமாக எழுதி அனுப்புங்கள். பிரசுரமாகும் குட்டிக் கட்டுரைகளுக்குப் பரிசு உண்டு. முடிவு தேதி அக்டோபர் 26உ. உறையின் மீது "பொழுதுபோக்கு" என்று குறிப்பிடவும். பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவற்றைத் திருப்பி அனுப்ப இயலாது. கடிதப் போக்குவரத்துக் கிடையாது.

ஆசிரியர், கல்கி, சென்னை

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# கண்களை ஒருபோதும் கசக்க வேண்டாம்...



# கரிக்கும் கண்களுக்குத் தேவை வைஸின்

கரித்தாலும், களைப்படைந்தாலும், கூசினாலும்
கண்களைக் கசக்காதீர்கள். சிவந்த கண்களை
நிமிட நேரத்தில் இதமுடன் தெளிவாக்கு-
வதற்கு வைஸின் இருக்கிறது.
உலகெங்கும் டாக்டர்கள் சிபாரிசு
செய்வது வைஸின். காரணம்,
அது வன்மை வாய்ந்தது.
எனினும் மென்மை கனிந்தது.

சில்லறை விலை ரூ. 2.97
(தல வரிகள் தனி)




**60 வினாடிப் பரீட்சை**

உங்கள் கண்கள் சிவக்-
திருக்கக் கண்டால், இதோ
எளிய வைஸின் சிகிச்சை:
ஒரு கண்ணிலே 2 சொட்டு
வைஸின் விட்டுக்
கொள்ளுங்கள். ஒரு நிமிடம்
கழித்துக் கண்ணாடியிலே
காண்பீர்கள் அத்தாட்சி...
ஒரு விழியில் சிவப்பு,
மறுவிழியில் தெளிவு.
(இனி சிவந்த விழியிலும்
வைஸின் இட்டு,
தெளிவாக்குங்களேன்).

# வைஸின்

**கலங்கிய கண்களிலே கதிரொளி மீட்பது வைஸின்**

Pfizer :பைஸர் தயாரிப்பு. "உலக நலனை நாடும் விஞ்ஞானம்"

விண்டாஸ்-PZ. VI.2-140 TH

